திவனுக் கிவ்வளவு புசிப்பென்னுமட்டறிந்து வரைந்துநிற்கு நியதிநீங்கு மிது நீங்கவே யான்மா விடயங்களை யிச்சித்துப் பகுத்தறிந்து பற்றிய நுப்விக்க வவ்வான்மாவுக் கிச்சாஞானக் கிரியைகளை யெழுப்புமிராகம் வித்தை கலையென்னு மிம்மூன்று நீங்கும்.

இவைநீங்கவே யான்மாவைப் பஞ்சேந்திரியங்களினுங்கறங்குபோற்கொண்டு சுழற்றும் புருடனீங்கு மிது நீங்கவே யவ்விடயங்களைப் புசிக்குமிடத் தவ்விடயமென்றுந் தானென்று மிரண்டற மயக்கிநிற்கு மாயை நீங்கும்.

இங்ஙனம் வித்தியா தத்துவங்க ணீங்கவே யிவற்றைப் பிரேரகம் பண்ணுஞ் சுத்த தத்துவங்க ளொந்துநீங்கு மிங்ஙனந் தத்துவ முப்பத்தாறு நீங்கினவிடத் தான்மாவி னிச்சை பெத்தத்தில் விடயத்தின்மேற் சனித்ததுபோற் சிவத்தின்மேற் சனிக்கும் ஞானம், விடயானந்தம் அசுத்தந் துக்கம் அனித்தியமென்றுஞ், சிவாநந்தஞ் சுத்தம் சுகம் நித்தியமென்றும், பகுத்தறிந்து கொண்டுநிற்குங் கிரியை பழையபழக்கத்தால் விடயங்கண்மேற் செல்லினு மவற்றிற் செல்லாது மறுத்துநீங்கிச் சிவத்தையே நாடிநிற்கு மான்மா விச்சாஞானக்கிரியைக ளிங்ஙனநிற்பது.

சிவன் ஆன்மாக்களை முத்தியிலே யடைவிக்க வேண்டுமென்னு மிச்சைப்படி நிற்பதாகலிற் றிருவருட்பதியு மித்திருவருளை முன்னிட்டுக்கொண் டறியும் பரைதெரிசனமுதலிய வநுபவங்களாகிய வெதிருமவைகளை யறிந்த தானுங் கமூன் றாநந்தா தீதப்பட்டா விரண்டென்று மொன்றென்றுங் கூறக்கூடாதாகலின், "சித்தாந்தவேதாந்தச் சீர்மையிலே" யென்றார்.

கன்மமென்பது சேட்டைமேலேறிற்று. ஆன்மா சத்தாதிகளைத் துரிசற விடுத்தபோது மற்றைத் தத்துவ முப்பத்தொன்று மிங்ஙனு நீங்கலிற், சத்தாதிகளை முன்வைத்துக் கூறினார்.

முத்தியையறிவிப்பது வேதாகம முடிவாகலிற், சீர்மையென்னு மிம்முத்தியி லதனையறிந்து கூறும் போதமின்மையா லதிர்வசனமென்றுங் கூறினார்.

உதாரணம். (சிவப்பிரகாசம்.) மருவிய பொறியிலொன்று முழுவ ... க்கைவயொளியுமோசை நாற்றமென்றை

ந்தின், வகைதெரிவான் கட்டே யுலகு. என்றும், மற்றும் வருவனவற்றுனுங் காண்க. (ருஉ)

(கவி-ருங-அ-கை.)

சிவஞானியினது மகிமை யிங்ஙனமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

சிந்தை பயமிலச்சை சீல மருவருப்பு
0 வந்தைவிடுஞ் சாந்திகுல மாசார - மிந்தவழி
யெட்டுஞ் சிவயோகிக் கில்லையென மாமறைக
ட்டும் பெருமுரசந் தான்.

(இ-ள்.) சிந்தைபயமிலச்சை சீலமருவருப்பு வந்தைவிடுஞ்சாந்திகுலமாசார மிந்தவழியெட்டும்,, எ-து. எனக்கின்னது வேண்டுமென்னுஞ் சிந்தனையுந் துட்டமிருகாதி தோன்றியக்காலச்சமு மின்னாரின்னது சொல்லப்பொருரென்னு நாணமுஞ் சாந்திராயண விரதமுதலியசீலமு மீதசுத்தமென்னு மருவருப்பு மகந்தையாற்செய்தபாவந் தீர்க்கும் புண்ணிய மீதென்று செய்யுஞ் சாந்தியுங்குலாசாரமுஞ்சமையாசாரமுமாகிய விந்தமார்க்க மெண்வகையுஞ்.

"சிவயோகிக் கில்லையெனமாமறைக ட்டும்பெருமுரசந்தான்" எ-து. சிவத்தோடிரண்டறக்கூடி நின்ற சிவயோகிக் கில்லையென்று,மாமறைகளாகிய பெரியபேரிகை முழக்கும்-எ-று.

"மாமறைகடட்டும் பெருமுரச மென்றது" அவர்க்கில்லை யென்று பலபடக்கூறுதலிவை யெட்டுஞ்சிவத்திற் கின்றாகவினதனையடைந்த சிவயோகிக்கு மின்றெனபதாயிற்று. (ருங)

(கவி-ருச-அ-கை.)

இதுவுமது.

தத்துவத்தா ரல்லார் சலசந் திரனொப்பார்
தத்துவத்தார் செய்யுந் தவாதவங்கள் - சுத்தக்
ககனமழை யாற்கழுவிக் காற்றைக் கனலாற்
றெகனஞ் செயல்போற் றெளி.

---

0 அகந்தை-என்பது, அந்தையென்றிடைக்குறையாயிற்று.

"தத்துவத்தாரல்லார் சலசந்திரனெப்பார் தத்துவத்தார் செய்யுந்தவாதவங்கள்" எ-து. மெய்ப்பொருளாகிய பாதத்துவத்தையடையாதோர் தற்போதத்தாற் செய்யுந் தவாதவங்களினுலு மிவற்றின்பயன்களினுலு முயர்ந்துந் தாழ்ந்துஞ்சலத்திற் பிரதிபலிதமான சந்திரனைப் போலுமாவர். அப்பாதத்துவத்தை யடைந்தோ ரருள்வடிவாயிருந்து செய்யுந்தவங்களுமவங்களுமிவற்றான் வரும் பயன்களுமிவர்க்கெங்ஙனமாமெனின்,

"சுத்தக் ககனமழையாற்கழுவிக் காற்றைக்கனலாற் றெகனஞ் செயல்போற்றெளி" எ-து. நிருமலமாயுள்ள வாகாயத்தை மழையாற் கழுவிக் காற்றைக் கனலாற் சுடுவதுபோலுமா மென்றறிதி-எ-று.

ப-ம். ககனத்தைமழையாற் கழுவுதலுங் காற்றைக்கனலாற் சுடுதலுமின்றாயினவாறுபோற் றற்போதம் போய்ப் பெய்பிடியுண்டவரைப் போலுந் திருவருளே வடிவாயிருந்த மெய்ஞ்ஞானிக டிருமேனியினிகழுந் தவாதவங்களவ்வருள் விளையாட்டேயன்றி யவரவற்றைச்செய்தது மவற்றின்பயனவரைச்சார்வது மின்றென்ப தாயிற்று. தவாதவங்கடத்துவத்தா ரல்லார்க்கு வருவிக்கப்பட்டது. தத்துவமென்றது ஈண்டு சிவத்தை. (௫௪)

(கலி-௫௫-அ-கை.)

இதுவுமது.

காலனுக்குப் பாவமென் றுங் காற்றுங் கதிரவனுஞ்
சீலமிலா ரென்றுஞ் சிவயோகி - மேலொன்றைச்
சுட்டுவதுந் தம்மைச் சுழற்றிவிடா தாட்டுமலக்
கட்டின் பிராரத்திவலுக் காண்.

(இ-ள்.) காலனுக்குப்பாவமென்றுங்காற்றுங் கதிரவனுஞ் சீலமிலாரென்றுஞ்சிவயோகி மேலொன்றைச் சுட்டுவது,, எ-து. உயிர்களைக் கோறலாற் காலனுக்குப் பாவமுண்டென்று மசுத்த நிலத்திற் சலித்தலானு மந்நிலத்தெறித்தலானுங் காற்றுங் கதிரவனுமாசார மிலரென்றுங் கூறுதல்போற் சிவபூசையாதி நன்மார்க்கங்களைச் செய்திலரென்று நீராடலாதியாசார மிலரென்று மிவைமுதலிய குணதோடங்களைச் சிவயோகிகண்மேற் சுட்டிக்கூறுவது.

"தம்மைச்சுழற்றிவிடாதாட்டுமலக்கட்டின்பிராரத்திவலுக்காண்" எ-து. தம்மைவிடாது பற்றிநின்றமலத்தைக டோறுஞ்சுழற்றி யாட்டப்பட்ட மலபந்தத்தினாற் றோன்றும்பிராரத்தியினதுசாமர்த்தியமாம் எ-

ப-ம். சரிதை கிரியாயோக ஞானங்களுள் ஞானமொன்றுமே முத்திக் கேதுவாகலி னிஞ்ஞானத்தான் முத்தியை யடைந்திருத்தலாற் சரிதாதிகளும் உடம்பாதி யசுத்தங்களையெல்லாங் கடந்து சுத்தமாயுள்ள வானந்தவெள்ளத்தின் மூழ்கி யிருத்தலா னீராடலாதி யாசாரங்களுஞ் செய்வதின்றிச் சிவயோகி சும்மாவிருப்பன். அங்ஙனமிருப்பது சரிதாதிகளைச் செய்வோர்க்கு மலமறைப்பாற் றெரியாது தமமைப் போற்பார்த் தவனையிகழ்தலான், மலக்கட்டின் பிராந்தி வலுக்காணென்றார். க-து. காலனுக்குப்பாவமுங் காற்றிற்குங் கதிரவனுக்குஞ் சுத்தமு மின்றாயதுபோ ன்னமார்க்கஞ் செய்யாமையாற் பாவமு மாசாரமின்மையா லசுத்தமு மவர்க் கின்றென்பதுங் காண்க. (ருரு)

(கலி-ருசுஅ-ஐ)

இதுவுமது.

நாயேறி வீழ்ந்தென னடாத்துகிலென ஞானிக்குப்
பேயாஞ் சகம்பழித்தென் பேணுகிலென் - றோயா
பெருமை சிறுமையிலை பின்னுமுன்னு மிலலை
வளைவற்று வேண்டியசெய் வார.

(இ-ள்.) நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென் ஞானிக்குப் பேயாஞ் சகம்பழித்தென்பேணுகிலென் றோயார், எ-து. நாய்மேலிவர்ந்தோனதினின்றும் வீழ்ந்ததனு லிகழ்ச்சியென்னை வீழாதிருந் ததனை நடாத்தியதாற் புகழ்ச்சியென்னை அதுபோல, ஞானிகட்குப் பேய்க்கூத்துப் போற்றோற்று மிச்சகத்தி லுள்ளா ரிகழ்ந்தா லவர்க்கோர் சேதமென்னை புகழ்ந்தா லோர இலாபமென்னை யவ ரொன்றேடுந்தோயார்.

“பெருமைசிறுமையிலை பின்னுமுன்னுமில்லை வளைவற்று வேண்டியசெய்வார்” எ-து. அம்மேன்றியுயர்ச்சி வந்ததென்று பெருமையுந் தாழ்ச்சிவந்ததென்று சிறுமையு மவர்க்கில்லை பின்னாகிய சகலமு முன்னாகிய கேவலமு மில்லையாகலிற் சுத்தமாகிய வருள்வடிவாயிருந் தளவின்றித் தாம வேண்டியவாறே திருவிளையாட் டாடுவார்-எ-று.

க-து. இகழ்ச்சியாயுள்ள நாயேறிக்கு வீழ்ந்தாலு நடாத்தினுலுமிகழ்ச்சி புகழ்ச்சி யின்றாயதுபோல ஞானிக டமக் கிகழ்ச்சியாயிருந்தவுடம்பை யிகழ்ந்தாலும் புகழ்ந்தாலு மவை யவர்க்கின் றென்பதாயிற்று.

பூ-ம். செம்பிற் களிதம்போன் றுயிரை யனுதியிற் பற்றியிருந்த சகசமல நீக்கற்பொருட்டு மாயையிற் றனுவாதி கொடுத்தலிற் சகலத்தைப் பின்னென்று மாணவ சம்பந்தமான கேவலத்தை முன்னென்றுங் கூறினர். (ருசு)

(கவி-ருஎ-அ-கை.)

ஞானம் பெற்றோரைப் புகழ்ந்துகூறியபின்ன ரிந்தஞானத்தை யருளிச் செய்தற்குத் தலைவராகிய பிள்ளையாரைப்புகழ்ந் தித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

சன்மார்க்க மேமுதலாய்த் தாதமார்க் கத்தளவுந்
தன்மார்க்க மானவெங்கள் சம்பந்தன் - றன்னைத்
துறவி யரசு சுகியோகி போகி
யறவன் மறவனென லாம்.

(இ-ள்.) சன்மார்க்கமேமுதலாய்த் தாதமார்க்கத்தளவுந் தன்மார்க்கமானவெங்கள் சம்பந்தன் றன்னை,, எ-து. ஞானமுதற் சரிதையீறுய்ச்சொல்லப்பட்ட நான்குபாதத்திற்கு முரித்தாகிய சன்மார்க்க முதற்றாதமார்க்க மீறுய்ச் சொல்லப்பட்ட விந்நான்கினையுந் தமதருளொறியா லெனக்குண்டாகச் செய்தருளிய வெமது சுவாமிகளாகிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரை?

"துறவியரசுசுகியோகிபோகி யறவன்மறவனெனலாம்" எ-து. எல்லாவற்றோடுங் கூடியிருந்து மவற்றோடு தாக்கற்று நிற்றலிற் றுறவியென்றுஞ், சகலபுவனங்களையும் தாமேயிருந்து நடத்திலினரசென்றுமாநந்தமயனு யிருத்தலிற் சுகியென்றுஞ் சிவயோகத்தை யநுக்கிரகித்தலின் யோகியென்று ஞான்ம போதங்களை விழுங்கிக் கோடலிற்போகியென்றுஞ் சகலதருமங்களு மோர்வடிவாயிருந்தலி னறவனென்றுமடைந்தோர் மும்மலங்களைக்கோறலான் மறவனென்றுஞ் சொல்லலாம்-எ-று.

ப-ம். சன்மார்க்கஞ் சகசமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்க்கமென நான்கு. இவற்றுட் சன்மார்க்கமாவது, நீயே நான் நானே நீயென்பது:

சகசமார்க்கமாவது, தோழனுந் தோழனுஞ். சற்புத்திரமார்க்கமாவது, பிதாவும் புத்திரனும். தாதமார்க்கமாவது, ஆண்டவனு மடிமை

(ருஎ)

(கவி-ருஅ-அ-கை.)

ஞானிகட்குப் பத்திசெய்வார் வீடடைவாரென் றித்திருவெண் பாவிற் கூறுகின்றார்.

தானல்லர் தன்னதல்லர் தத்துவசா லத்தலைவர்
மேனிசதா நந்தம் விளையுமிட - மியானைக்கைப்
போலே யிவருடம்பிற் போகமெலாம் பூசையித
னாலே சகம்பிழைக்கு மெண்.

(இ-ள்.) தானல்லர் தன்னதல்லர் தத்துவசாலத்தலைவர் மேனிசதா நந்தம் விளையுமிடம்,, எ-து. தநுகரண புவன போகங்களாயுள்ள தத்துவங்களெல்லாந் தமக்கயலாகலி னவை தாமுமல்லாமல் அசுத்தந்துக்க மனித்தியமா யிருத்தலி னவை தமதுமல்லாமல் அத்தத்துவங்களோடு கூடியுங்கூடாத சாலத்தோடு மவற்றிற்குத் தலைவராயிருந்த மெய்ஞ்ஞானிக டிருமேனி சதாநந்த மேன்மேலு முண்டாகுமோ ரிடமாகலின்?

"ஆனைக்கைபோலே யிவருடம்பிற் போகமெலாம் பூசையிதனாலே சகம்பிழைக்குமெண்" எ-து. எடுத்த பொருளின் பரிசமறிவது போற்றோற்றித் தன்னுளிருந்த நாசிக்குக் கெந்தவிடயமுமாகவிருந்த யானைக்கைப்போ லிந்தஞானிகளது திருமேனியா லநுபவிக்கும்போகமெல்லா மித்திருமேனி யநுபவிப்பதுபோலிருந் தித்திருமேனி யுள்ளிருந்த பரிபூரண சிவத்திற்கும் பூசையா மிப்பூசையினாலே சகத்திலுள்ளார் பிறவித் துன்பத்திற்குத்தப்பி வீட்டின்பத்தை யெய்துவரென் றறிதி-எ-று.

ப-ம். முற் றநுகரணங்களை யாமென்றும், புவனபோகங்களையெமதென்றுங் கருதிநின்ற தற்போதங்கெட் டிப்போ தறிவுதாமா யாகந் தம் தமதாயிருத்தலிற் றானல்லர் தன்னதல்லரென்றார்.

தேகத்திருந்த போதத்தையுங் கருவிகளையும் விழுங்கிக்கொண்டதனுட் சிவங் குடியாயிருத்தலின், மேனி சதாநந்தம் விளையுமிடமென்றும், போகமெல்லாம் பூசையென்றுங்கூறினார். (ருஅ)

(கவி-ருகூ-அ-கை.)

திருவடியை யடைந்தோர்க்கே போக மனுபவிப்பதாமன்றி மற்றையார் தமக்குச்சொன்னநெறி நிற்பதேயன்றிப் போகமனுபவிக்க லாகாதென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பூசி முடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலு
மாசை மிகுந்த வரசியர்க்காங் - காசிற்ற
முண்டையர்க்கா காசீவன் முத்தனுக்குப் போகமல்லாற்
குண்டையொப்பார்க் கேனிதுவா கும்.

(இ-ள்.) "பூசிமுடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலு மாசைமிகுந்தவரசியர்க்காம்,, எ-து. சந்தனமாதிபூசப்படுவனவு மல்லிகையாதி முடிக்கப்படுவனவுங் கொந்தளப்பொன் ஞேலையாதி பூணப்படுவனவும் பொற்சரிகைச் சேலையாதி யுடுக்கப்படுவனவுமாகிய விவைமுதலிய போகங்களெல்லா மணையனுன் மிகவு மிச்சிக்கப்பட்ட சுமங்கலியாகிய வரசியர்க்கேயாகு மதுபோலும்?

"சீவன் முத்தனுக்குப் போகமல்லாற் காசிற்ற முண்டையர்க்கா கா குண்டையொப்பார்க்கேனிதுவாகும்" எ-து. சிவன திச்சைப்படியே யவனது திருவடிசேர்ந்த சீவன்முத்தனுக்கே போகமன்றி மங்கலநீங்கிய வமங்கிலிக்குப் போகங்களிலொன்றேனு மாகாவாறுபோலுஞ் சிவனடிசேராது தவம்பண்ணுவோர்க்கு மத்தவத்திற்குரிய விரதஞ்செய்து முடிப்பதேயன்றிப் போகங்களி லொன்றேனு மநுபவிக்கலாகாதலைதன்றிக் குண்டையைப்போலுஞ் சரிதாதி தொழிற்செய்வோர்க்கு மிப்போகமநுபவிப்ப தேனுகும்-எ-று.

ப-ம். தம்முதலாகிய சிவத்தை யிழந்து தவம்பண்ணுவோரை முண்டையரென்று குறிப்பாற் கூறினுர்.

குண்டைக்குத் தொழிற் செய்வதேயன்றி யரையனோடுங் கூட்டரவின்மைபோற் சரிதாதிகளைச் செய்வோர்க்கு இத்தொழிற் செய்வதேயன்றி சிவத்தோடுங் கூட்டரவின்மையா லிவரைக்குண்டையொப்பா ரென்றார். (ருக)

(கலி-சுமி-அ-கை.)

ஞானி கிரியை செய்யினுஞ் செய்யாவிடினுஞ் சிறப்பாவனென்பதுங் கன்மி கிரியை செய்யாவிடின் மிகவு மிழிவாவனென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

ஆணைமதப் பட்டா லலங்கார மன்றிநாய்

தீடைமீறி னுலுஞ் சதிராகுங் கன்மி
கடைமீற லாகாது காண்.

(இ-ள்.) ஆனைமதப்பட்டா லலங்காரமன்றியநாய் தானுமதப்பட்டா ற் சரியாமோ,, எ-து. மதமேறு முன்னுஞ் சிறப்புள்ளயானை பின்மதமேறித் தன்றடைகடந்துசேறினுஞ் சிறப்பேயாமன்றிப்பேயேறு முன்னு மிழிவுள்ளநாய் தானும் பின்பேயேறினு லதுபோலுஞ்சிறப்பாமோ வவைபோலும்?

"ஞானி தடைமீறினுலுஞ்சதிராகுங்கன்மி கடைமீறலாகாதுகாண்" எ-து. முன்னின்ற நிலை கடவாதிருந்தபோதுஞ் சிறப்புள்ளமெய்ஞ்ஞானி பின்னுனந்த மேலிட்டா லந்நிலைகடந்து சேறினுஞ் சிறப்பேயாவன். கருமி நிலைகடவாமுன்னு மமெய்ஞ்ஞானிகட் கிழிவாவன். தற்போதத்தா லந்நிலைகடந்தபோது மிகவுமிழிவாவனுகலிற், றன்னிலை கடக்கலாகாது-எ-று.

ப-ம். ஆனைமதமேறினுன் மிகவுஞ்சிறப்பு, நாய் பேயேறினுன் மிகவு மிழிவு, அவைபோல, ஞானி தடைமீறினுன் மிகவுஞ் சிறப்பு. கன்மிகடைமீறினுல் மிகவு மிழிவென்பதுங் காண்க. (கூ0)

(கவி-கூக-அ-கை.)

தீவிரதரபக்குவனுக்குக் கூறு முபதேசமே போதுமென்பது மற்றைய மூவர்க்கு மவர்கூறு முபதேச மொழியுமன்றி வேதாகமங்களாலுணர்த்தவேண்டுமென்பதுமித்திருவெண்பாவிற்கூறுகின்முர்.

அதிபக் குவத்தாற் கநுக்கிரகஞ் செய்யும்
புதுமைக்குச் சாத்திரங்கள் போதா - திதுவென்னுப்
பேறே யனந்தம் பிரகாரம் வந்தாலும்
வேறே யனந்தம் விதம்.

(இ-ள்.) அதிபக்குவத்தாற் கநுக்கிரகஞ்செய்யும் புதுமைக்குச்சாத்திரங்கள்போதாது,, எ-து. தீவிரதரபக்குவ முடையானுக்கு ஞானுநுக்கிரகம் பண்ணு மதிசயத்திற்கு வெவ்வேறு வகைப்பட்ட சாத்திரங்களெல்லாம்போதா தஃதெங்ஙனமெனின்,

"இதுவென்னுப் பேறேயனந்தம்பிரகாரம் வந்தாலும் வேறேயனந்தம்விதம்" எ-து. இதுவென் றொன்றைச்சுட்டிதற்கிடம் வைக்காது

கூறுமுபதேசபபெறே யவனுக் கரந்தம் விதமாய்க்கூறுஞ் சாத்திரங்க ளாகு மிங்ஙனமவந்த பக்குவனு மனந்தமபெயர்களுள்ளும் வேறிவனே யொழிந்த பக்குவர்களு மநந்தவிதபாவார்கள்-எ-று.

ப-ம் தீவிரதர பக்குவனறிவு சிவத்தையேயன்றி மற்றொன்றையு ம்பகுத்து நாடாதாகலிற் சாத்திரங்கள் போதாதென்றார். மந்தமந்தத ரர் தீவிரமென்னு மிம்மூன்று பக்குவரு நாறுபேதமாய் வருதலினுனு மிவர்க்குபதேச நாறுபேதமாகக் கூறிய பக்குவப்படுத்தவேண்டுமாத லினுனு மநந்தவிதமென்றார். (சுக)

(கவி-சுஉ-வு-கை.)

பரையோகத்தி னிற்போருஞ் சீவன்முத்த ராவாரென் றித்திரு வெண்பாவிற் கூறுகின்றார்.

அறியாமை நீங்கி யறிவா யறிவே
யறியாம லாயிரண்டு மற்றுப் - பிறியாதார்
தன்னிழப்பின் ஞான சமாதிக்குச் சாதகரா
மந்நிலைக்கே சீவன் முத்த ராம்

(இ-ள்.) அறியாமைநீங்கி யறிவாயறிவே யறியாமலாயிரண்டுமற்றுப் பிறியாதார்,, எ-து. சகலகேவலமாகிய வறியாமை நீங்கித் தம்மையரு ளாற்கண்ட வ்வருளறிவாகி முன்மலமாகிய வறியாமையின் மறைந்தி ருந்தாற்போ லவ்வறிவு தானே யறியாமையாகி யதனுண் மறைந்திவ்வ றிவென்பதுந் தாமென்பது மாகிய விரண்டுமற் றிதனைப்பிரியா திருப் போர்?

"தன்னிழப்பின்ஞானசமாதிக்குச்சாதகரா மந்நிலைக்கே சீவன்மு த்தராம்" எ-து. அங்ஙனமிருக்கவே தற்சுதந்தரபோதமறும் அஃது அ றவே பறைதானுகிய ஞானசமாதிக்குச் சாதகராவரிச்சாதகம்வந்தவ க்கணமே சீவன்முத்தருமாவர்-எ-று.

ப-ம். இம்முறைவந்து பரையோகத்தி னின்றோர்க்குச் சுகப்பேறு ஞ் சூகாதீதமுந் தாமேகிடைக்குமாகலி னந்நிலைக்கே சீவன்முத்தரா

(கவி-சுஙு-அ-கை.)

சிவஞான மில்லார்க்குச் சிவவேடத்தாற் பயனின்றென் றித்திரு வெண்பாவிற் கூறுகின்றார்.

மகவான்கண் பார்த்தவர்க்கு மாண்பாய்த் தனக்குப்
பகமா யிலச்சைவிடாப் பண்பாய்ச் - செகமாணக்
கண்ணுரி போல்வேடக் கண்ணுடி காட்டுதவ
மெண்ணூழி காலமிருந் தென்.

(இ-ள்.) மகவான்கண்பார்த்தவர்க்கு மாண்பாய்த்தனக்குப் பகமாயி லச்சைவிடாப்பண்பாய்,, எ-து. இந்திரனது கண்களைப் பார்த்தபேய ர்க்கு மாட்சிமையா யவ்விந்திரனுக் கல்குலா யவனதுள்ளே நாணம்வி டா முறைமையா யிருந்ததுபோல?

"செகமாணக் கண்ணுரிபோல்வேடக் கண்ணுடிகாட்டுதவமெண் ணூழிகாலமிருந்தென்" எ-து. தவவேடத்தைப் பார்க்கின்ற சகத் தோர்க்கு மாட்சிமையா யிருப்ப விவ்வேடத்திற்குரிய ஞானந்தமக்கின் றென்று தம்முள்ளே நாணமுற வேசிபோன்மினுக்கிய வேடமாகிய க ண்ணுடி காட்டப்பட்ட தவத்தா ளளவிறந்த காலமிருப்பினு மவ்வேட த்தாற்பயனவர்க்கென்னையுள-எ-று.

ப-ம். அவனுக்குக் கண்களைப்பார்க்குந்தோறு மிலச்சைவரலாவில ச்சைவிடாவென்றார். அவனையிவர்க்குவமை கூறினமையா லிவர்க்கு மிவ்வேடத்தைப் பார்க்குந்தோறு மிலச்சைவருமென்பதாயிற்று.

தவத்தோர்க்குரிய வுள்ளொழுக்கமான ஞானசார மொன்றுந் தோற்றாது வடிவமாத்திரையே தோற்றினமையால், வேடக்கண்ணு டி காட்டுதவ மென்றார். (சுஙு)

## முதலாவது வேதாகமப் பொதுவிலுபதேசம்

முற்றிற்று.







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

# சத்திநிபாதத்
# துத்தமரொழிவு.



அஃதாவது, நால்வகைச்சத்திநிபாதத்துத்தமர்களதுபிரபஞ்சப் பற்றொழிவை முறையே கூறினமையா லிவ்வதிகாரத்திற்குச் சத்தி நிபாதத் துத்தமரொழிவென்று பெயராயிற்று. இவர் இந்நூற் குரியவ ராகலி னவ்வதிகாரத்தின்பின் னிவ்வதிகாரம் வைக்கப்பட்டது.

(கலி-க-அ-கை.)

தமதாசிரியர் ஞானபக்குவர் நால்வர்க்கு முபதேசிக்கு முறைமை யைத் தமக்கருளிச்செய்யும்போது மாநந்தா தீதரா யெழுந்தருளியிரு ந்தே யருளிச்செய்தாரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

சரிதாதி நான்கினுக்குஞ் சாலோக மாதி
வருமா றெனக்களித்த வள்ளல் - குருராயன்
ஞானத்திற் பக்குவர்க ணால்வர்க் குபதேச
மானத் தையு நிகழ்த்தி னன்.

(இ-ள்.) சரிதாதிநான்கினுக்குஞ் சாலோகமாதி வருமாறெனக்களி த்தவள்ளல் குருராயன்,, எ-து. சரிதை கிரியை யோகஞானமென்னு மிந்நான்கு பாதத்திற்குஞ் சாலோக-சாமீப-சாரூப - சாயுச்சியமென் னுமிந்நான்குபதமும் வருமுறைமையை யெனக்கருளிச்செய்தவள்ள ல்குருராயனாகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார்.

"ஞானத்திற்பக்குவர்க ணால்வர்க்குபதேச மானத்தையுநிகழ்த் தினன்" எ-து. ஞானபாதத்திற்குரிய மந்த மந்ததரந் தீவிரந் தீவிரதர மென்னு மிப்பக்குவமுடையார் நால்வரதிலக்கணமு மவர்க்குபதேசி த்த முறைமையையு மருளிச்செய்தார்-எ-று.

க-து. முப்பத்தாறு தத்துவங்களையு நியதிகளைவது சரிதை. யவற் றையறிந்து நீங்கிய தன்னை யருளா லறிந் தவற்றின் முடிவி னிற்பது, சாலோகபதம். ஆங்குத் தனக்கறிவித்த வவ்வருளைத் தெரிசித்துப் பி ன் னருளென்றுந் தானென்றும் பிறித்துநோக்காது தற்போதத்தை

யடைகிறுவது கிரியை யவ்வருளே வடிவாயிருப்பது சாமீபபதம். அவ்வ ணமிருந்து நிற்போதஞ் செறிதற்தோன்று தொழிப்ப தியோகம். ஆங் குப் பலாதாளுயிருப்பது சாரூபபதம். அப்பலா நீக்கத்திற்றோன்று ஞானனந்தத்தைப்பெறுவது ஞானம். அந்தவாநந்தத்தி லதீதப்படுவது சாயுச்சியபதம். ஆதலின், சரிதாதி நான்கினுக்குஞ் சாலோகமாதி வ ருமா றிங்ஙனமெனக்கொள்க. (க)

(கவி-உ-அ-கை.)

இதுவுமது.

கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவள வுக்களவு
சொன்னதல வெங்கள் சுவாமியுரை - மன்னடத்தி
லாநந்த மூர்ச்சிதர்கை யாடகயாழ் தன்னிலே
தானுகவம் போலமொழிந் தான்.

(இ-ள்.) கின்னரியைத் தொட்டவர்போற் கேடடவளவுக்களவுசொ ன்னதலவெங்கள் சுவாமியுரை,, எ-து. வருடி வாசிப்பார் தாம்நினைத் துக்கேட்ட பாட்டினளவுக் களவுகூறுங் கின்னரியைப்போன் றியானி னைத்து வினவியமட்டிற்கு விம்மட்டு விடைகூறியதன் றெமது சுவா மிகளாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாக் கஃதெங்ஙனமெ னின்?

"மன்னடத்தி லானந்தமூர்ச்சிதர்கையாடகயாழ்தன்னிலே தா னுகலம்போலமொழிந்தான்" எ-து. பரமேஸ்வரன் றிருநடனத்தி லாந டன வதிசயத்தைப்பார்த் தாநந்தபரவசராய் நிற்போற் கைப்பிடித்த பொன்னினு னியற்றப்பட்டயாழ் தன்னிலேதான் வாசிக்கு நலம்போ லியான்கேளாது கேட்கவெனக் குபதேசமொழிகளை யருளிச்செய் தார். எ-து.

ப-ம். அவரானந்த பரவசராய் நிற்கவுந் தெய்வயாழ் வருடாது வாசித்தல்போலப் பிள்ளையா ரானந்தாதீதர் யெழுந்தருளியிருக்கவு மவரது தெய்வவாக்கு வினையாதுகூறிற் றென்பதுமிக. "கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவளவுக்களவு சொன்னதல வென்றமையா ற்" கடாவும் விடையுந் தாமே யருளிச்செய்தாரென்பதாயிற்று.

தெய்வயாழ்க்குமேல் வேறியாழின்மைபோ, லித்தவாசிரியர்க் குமேல் வேறாசிரிய ரிலரென்பதுங்காண்க. யாழுன்னி வாசியாதிருக்

கவும் நோக்கங்கனஞ் செய்ததுபோற்றோற்றலிற் "ருறுகலம்போல மொழிந்தா னென்று திருவாக்குக் கதணியுவமையாகக் கூறினர். (௨)

(கவி-௩-அ-கை.)

ஞானசாரிய ருபதேசக்தா னல்வகைப் பக்குவருந் தெளிந்து சொன்ன முறைமை யித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

சுமமாதே பார்த்திருக்கச் சுத்தியா முத்தமர்க்குத்
தமமாய்வார்க் கோருரையே சஞ்சீவ - மென்மேலு
மாற்றஞ் சகுனப்புள் வாக்கு மதுவுண்ட
போற்றும்பி யின்பாட்டுப் போல.

(இ-ள்.) சுமமாதே பார்த்திருக்கச் சுத்தியா முத்தமர்க்குத் தம்மாய் வார்க்கோருரையே சஞ்சீவம., எ-து தீவிரதர பக்குவர்க் கோர்மொழியுங் கூறாது ஞானசாரியா னனுக்கிரகநோக்காற் பார்த்திருக்கவே யான்மசுத்தியாம. தீவிரபக்குவ முடையராய்த் தற்போத மொழிப் போர்க் கபோதஞ் சிறிதேனும பதையாதொழிதற் கேதுவாய்க்கூறு மோர்மொழியே சஞ்சீவம்போன்று சுத்தியாம்.

"மென்மேலு மாற்றஞ்சகுனப்புள்வாக்கு மதுவுணடபோற்றும் பியின் பாட்டுப்போல" எ-து. மந்ததரபக்குவர்க்கு விட்டிசையா திசைக்குஞ் சகுனப்புள் வாக்குபபோலச் சிற்சிலசொற்களாற் றெளிவிக்கச் சுத்தியாம. அந்தபக்குவர்க்கு மதுவை நிறையவுண்டதும்பி யிடையறாது பாடும் பாட்டுப்போல வேதாகமசாத்திரங்களானு நாநாவுபாயயுத்திகளானு மிடையறா தறிவிக்கச்சுத்தியாம். எ-று.

ப-ம். திருநோக்கக் குறிப்பா லக்கிலைதெரிக்குங்கோடலிற் சும்மாதே பார்த்திருக்க வென்றுஞ், சஞ்சீவத்தா லுடலஞ் சுத்தியாவதுபோல, வோருரையா லான்மசுத்தி பெறுதலிற் சஞ்சீவமென்றுஞ், சகுனப்புள் வாக்காற் றுணிவுத்தபொருள் கிடைத்தலபோல் சிற்சிலசொற்களான் மெய்ப்பொருளைத் தெரிக்து கோடலிற் சகுனப்புள் வாக்குப் போலென்றும், மூர்ச்சித்துக்கிடந்த பெண்டும்பியை யாண்டும்பி சூழ்ந்துகொண் டிடையறாது பாடியாங்கவ் யதற்கம்மூர்ச்சைதெளிக் நிதனோடு பற்ந்து கூடலபோல நாநாவுபாய யுத்திகளா லிடைவிடாதறிவித் தறிவின்றி தானவ்மூர்ச்சையை நீக்கித் தமமோடு சேர்த்தலாற் றும்பியின்பாட்டுப்போலென்றுங் கூறினர். 11

சுத்தியாவது, சகல கேவலங்களைநீக்கி யுவற்றின் வாசனையோ டெழுந்த தற்போதமுமொழிதல். "மென்மேலுமாற்றஞ் சகுனப்புள் ளென்றதனு லாங்கைதயென்பதாயிற்று. சகுனப்புள் வாக்குப்போலெ ன்றும், மதுவுண்ட தும்பியின் பாட்டுப்போலென்றுங் கூட்டுக. (ரு)

(கவி-௬-அ-கை.)

அறிவாநந்தத்தழுந்திய போதம் விரிந்து விடயா நந்தத்திற்செல் லா தோரியல்பிற்றாய் நின்றோர்க்கே யவ்வானந்த மாறாதுகிடைக்கு மென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

முலைமுதிர நாண முதிரநடங்கி மூடிக்
கலவியிலே நக்கினத்தைக் காட்டற் - சலனைபப
னுனுலுந் தமபனைசெய் தாநந்த மாக்குவது
போனுலா மிந்தப் பொருள்.

(இ-ள்.) முலைமுதிரநாண முதிரநடங்கிமூடிக் கலவியிலே நக்கின த்தைக்காட்டல், எ-து. ஓர்பேதைப்பெண் டனதுமுலை முதிரமுதிர நாண மேன்மேலு முதிர்ந்து பிறபுருடரோடு முன்போனகையாடலா திசெய்யா தடங்கி யம்முலையினைமறைத்துத் தனது சுயபுருடனுக்குக் கூட்டுரவின்கண் ணக்கினத்தைக் காட்டுவதுபோலு மொருவனறிவு முதிரமுதிர முன்போல விடயங்களிற் செலவதற்கு நாணமுதிர்ந் த வ்விடயங்களிற் செல்லும் போதத்தையுள்ளடக்கித் திருவருளின்ம றைத்து, ஆநந்தத்திற் கொப்பித்துநிற்றல அப்போதத்தை யாநந்தத்தி ற் கொப்பிக்கவெனி னங்ஙனமொப்பிக்குமாறே தில்லாமல்,

"சலனைபயனுனுலுந் தமபனைசெய் தாநந்தமாக்குவதுபோனு லா மிந்தப்பொருள்" எ-து. போதச் சலனையானுலும் விடயப்பயனை யநுபவிப்பதானுலு மிவ்விடயபயனை நீக்கி யப்போதச்சலனையை ய டக்கி யப்போதத்தை யாநந்தமயமாக்குவதானுலு மிவ்வாநந்தப்பொ ருளோரியல்பிற்றாய்த் தோற்று தங்ஙனஞ்செய்வனபோமாயினிப்பொ ரு ளோரியல்பிற்றாய்த் தோற்றுவதாம். எ-று.

ப-ம். முலைமுதிர்ந்த பெண் அம்முலையையு மல்குலையும் பிறபுரு டனுக்குக்காட்டாது மறைத்துச் சுயபுருடனுக்குக் காட்டுதல்போல றிவுமுதிர்ந்தோர் தற்போதத்தை விடயங்களிற் செல்லவொட்டாது மீட்டுள்ளடக்கி யதனைச் சிவாநந்தத்திற் கொப்பிக்கவேண்டுமாகலி னங்ஙன் முவமை கூறினார்.

போதம் விடயங்களிற் சென்றழுந்தியு மாரந்தத்திற்சென்றழுந்தி யு மிங்ஙன மாறிநிற்குமெனி னனந்தமு மாறித்தோன்றுமாகலி, னநந் தமாக்குவது போனலாமிந்தப்பொரு ளென்ருர். ஆனலுமென்பதனை ச் சலனையென்பதனேடு மாரந்தமாக்குவதென்பதனேடுங்கூட்டுக. ()

(கலி-ரு-அ-கை.)

பதி பசு பாசங்களின துண்மையை வேதாகமங்களா லுணர்ந்தா லு மப்பதியைச் சுவாநுபவத்தா லுணராரர்க்குப் பயனிலையென்றி திரு வெண்பாவிற் கூறுகின்ருர்.

பஞ்ச மலமும் பசுவாநந்த மும்பதியு
மஞ்சு தொழிலு மவத்தைகளுங் - கிஞ்சறிவுங்
கேட்டுச் சரிதாதி செய்துகிலே சங்கெடாக்
காட்சிமெழு கிற்கனகங் காண்.

(இ-ள்.) பஞ்சமலமும் பசுவாநந்தமும்பதியு மஞ்சுதொழிலு மவத் தைகளுங் கிஞ்சறிவுங்கேட்டு,, எ-து. ஆணவமாயை காமியந் திரோ தை மாமாயையென்று கூறப்பட்ட பஞ்சமலங்களின திலக்கணமு மி ம்மலங்களான் மறைப்பட்டிருந்த வனேகமாயுள்ள பசுவின திலக்கண மு மிப்பசுபாசங்கட்கு முதன்மையா யேகமாயிருந்த பதியின திலக்க ணமு மப்பதியாற் செய்யாநின்ற பஞ்சகிருத்தியவிலக்கணமு மிப்பஞ் சகிருத்தியத்தானடக்குஞ் சாக்கிராதி யஞ்சவத்தையின திலக்கணமு மிவ்வஞ்சவத்தைகடோறுஞ் சுழலுமான்மபோத விலக்கணமுங் கே ட்டிருந்தும்?

“சரிதாதிசெய்துகிலே சங்கொடாக்காட்சி மெழுகிற்கனகங்கா ண்'' எ-து. சரிதை கிரியா யோகங்களைச் செய்து மப்பாசத்தை நீக்கி ப்பதியைபடைந்து பிறவித்துன்பத்தை நீக்கமாட்டாதா ரறிவு மாற்ற நியுமெழுகிலடங்கிய கனகம்போ லுமாம். எ-று.

ப-ம். உரைத்தொட்ட வேரியகனக முருக்கியெடாமையின்,யெ ழுகின் மறைந்தாற்போலத் திரிபதார்த்தங்களின துண்மையைக்கேட் டறிந்த வறிவு சுவாநுபவத்தான் வெளியாகாது மலத்துண் மறைந்த மையான், மெழுகிற் கனகங்கா ணென்ருர். அவ்வறிவு பிறருக்குக்காட் டொய்க் கோற்றலா னதனைக்காட்சியென்ருர். (இ)

(கவி-சு-அ-கை.)

சிவாநந்தத்தைப் பெருதிருந்தும் பெற்றேமென்று சத்தியங்கூற ன் மிகவும் பாவமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றூர்.

வாதி வடத்தினமு மாமருந்து வன்பிணியுஞ்
சாதித்த வீரன்மேற் றம்பலமுந் - தீதததுபோன்
ஞானத்தி லின்மை நசிப்பித்து நானதுவா
மூனத்தை யாரொழிவிப் போர்.

(இ-ள்.) வாதிவடத்தினமு மாமருந்துவன்பிணியுஞ் சாதித்த வீரன் மேற்றம்பலமுந் தீததுபோன்,, எ-து. பஞ்சலோகங்களையும் பொன்ஞக்கினேனென்று கூறு மிரதவாதி மிடியனுயிருத்தலும் பிறர் பிணிகளையெல்லாம் போக்கினேனென்றுகூறு மகாவயித்தியன் பிணியனு யிருத்தலும பகைகளையெல்லாம் வென்றுசாதித்தே னென்றுகூறு மகாவீரன்மேற் பிறர்போட்ட தமபல மிருத்தலுங் குற்றமா மதுபோல?

"ஞானத்திலின்மை நசிப்பித்து நானதுவா மூனத்தையாரொழிவிப்போர்" எ-து. சுவாநுபவத்தான் ஞானனந்தத்தை யடைதற்கேதுவாகக்கூறும் ஞானசாத்திரங்களைக் கேட்டறிந்தமாத்திரத்தில் யாமவ்வாநந்தம்பெறு ததனை விடயச்சேற்றூற்கெடுப்பித் திவ்விடயச்சேற்றிலழுந்திநின் றவ்வாநந்தத்தின் மயமானேமென்று கூறுங் குற்றத்தை யாவர் நீக்குகிறபாா. எ-று.

ப-ம். மிடி பிணி தம்பல மவரிடத் திருத்தலாற் றுஞ்சொன்னவாறுசெய்பவரலரொன் றறிந்தாற்போல, விடயப்பற்றுவிடாமையா னிவரிங்ஙனங் கூறுதலேயன்றி யதனை யடைந்திலரொன்பதறிக.

மிடியாதி யவர்க்குக் கூறினமையால் விடயமிவர்க்கு வருவிக்கப்பட்டது. இங்ஙனங்கூறுதன் மிகவுந்தோடமாகவி, னூனத்தையாரொழிவிப்போ ரென்றூர். (சு)

(கவி-எ-அ-கை.

ஆசாரிய ருபதேசங் கூறுமிடத்து மாணுக்கன் சகலகேவலங்களிற் றுக்கற்றுநின்று கேட்பின் மூவகைவினைகளு மறுமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றூர்.

மயலற்றுர் கேட்க மகிழ்ந்துரைத்த வார்த்தை
யயலுக் குபதேச மாகும் - துயிலாத்

தொறுவனைப்போ னின்றுகே சேழுக்கு நோயு
மறுமுறைத்தே நாமுறைப்ப தை.

(இ-ள்.) மயலற்றார்கேட்க மகிழ்ந்துரைத்தவார்த்தை யயலுக்குப தேசமாகுப,, எ-து. தேகாதி பிரபஞ்சங்களை யானெனதென்று கருது மயக்கமற்ற வதிபக்குவத்தார்கேட்க ஞானசாரியரானந்த மகிழ்ச்சியா லருளிச்செய்த வுபதேசமொழிக ளப்பக்குவர்க்கன்றி யயலிருந்தோர்க்கு முபதேசமாகுமாகலி னம்மொழிகளை?

"துயிலாத் தொறுவனைப்போனின்று கேடுசெழுக்குநோயு மறுமுறைத்தேநாமுறைப்பதை" எ-து. சாக்கிரத்தினில்லாது சொப்பனத்துஞ் செல்லா திடையான தன்மையாய்த் துயின்றுந் துயிலாத விடையனைப்போன்று கேவல சகலங்களிற் றாக்கற்றுநின்றுகேட்டி. யிங்ஙனங் கேட்டியெனிற், றாசின்மேலெறு மழுக்குப்போன் றேறுவதாய வாகாமிய துன்பமுமொழியு மியா முனக்குச் சொல்லவேண்டியபுத்தியைச் சொன்னோ மிதனைநீயறிதி. எ-று.

ப-ம். இடையன் கோற்கண் டுயிலாதுதுயின்று மாட்டுமணியாரவத்தைக் கேளாதுகேட்கு முறைமைபோ லிப்போது ஞானோபதேசங்கேட்கும்போதே சகலகேவலங்க டாக்காது கேட்போ னநுபவமுற்றும்பெற்று முன்னிலைச்சுட்டு மொழிந்துநிற்பனுகலின், தூசழுக்கு நோயுமறுமென்றார். தூசழுக்கு நோயுமறுமென்றவும்மையாற், சஞ்சிதபிராரத்தமு மறுமென்பதாயிற்று.

அஃதெங்ஙனமெனில், கருவிகள் சடமாகலி னவைகளான்மாவையறிந்து கூடமாட்டா, ஆன்மா கேவலத்தின் மறைபட்டுக்கிடத்தலினவைகளைச்சென்றுகூடமாட்டான். கருவிகளைப்பிரேரகம்பண்ணியிக்கேவல மறப்பைநீக்கிச் சகலத்தில்வைத்துப் பெத்தத்திற் றேகாதிபிரபஞ்சங்களை யறிவிப்பதுபோலவுங், கீழாலவத்தைப்படுத்திக் கேவலத்தில் வைப்பதுபோலவு, முத்தியி லிக்கேவலசகலங்க டாக்காது வைத்துச் சுத்தாவத்தையிற் செலுத்திச் சுத்தத்தில்வைப்பதுந் திருவருளேயென்றும், இஃதன்றிக் கருவிகளைக்கூட்டுவித்தபோ தான்மாவிற்குச் சுதந்திரவறிவுதோன்றித் தானல்லாததேகத்தைத் தானெனக்கருதிநின் றியானே யெல்லாவற்றையுமறிவே னெல்லாவற்றையுஞ் செய்துமுடிப்பே னெனக்கெதி ரொருவருமின்றெனநிற்கு மிங்ஙனநிற்பதனு லிதாகிதங்களு மிவற்றான்வரும் வினைகளுந்தொடரு மித்தொடர்ச்சியா லளவிறந்தபிறவிகளி னெடுங்காலஞ்சுழல்வதிங்ஙனமெறந்தப்புல்லறிவைவிட்டுநீங்கிக் கானலை நீரென்றுமயங்கிக் கண்டபோதும், நீரை நீரென் றுள்ளபடி கண்டபோதுந் தனக்குக் காட்டிநின்ற

துகதிரொளியென்று கண்கண்டுநின்றாற்போ லான்மாபொய்யைமெய்யென்று மயங்கிநின் றறிந்தபோதும்.

மெய்யை மெய்யென்று தெளிந்துநின் றறிந்தபோதுந் திரோபவித்து மநுக்கிரகித்து மறிவித்து நின்றதுந திருவருளேயென்றுமுள்ளபடியறியிற் றானென்பதுமிந்தமுறைமே அவனவளது வென்னுமுன்னிலைக்கண்ணும் திருவருணடப்பிக்கின்றதென்றுகண டமமுன்னிலைகளாற் றனக்கோரிதாகிதங்கள் வந்தகாலை யம்முன்னிலைகளை நாடாது வினைக்கீடாய்த் திருவருணடபிக்கின்றதென்று அத்திருவருளை நாடிநிற்றலாற் பிறரென்பதுமபோ யெங்குந்திருவருளாய்க் காண்டலாலாகாமியமாறுமெனபதும, ஞானசாரிபா கிருபாநோக்கத்தாற்சஞ்சிதமாறுமென்பது முண்மை.

"முற்செனனமபுரிந்தவல்வினை யுடலூடனகலுமென்றும, "வினைப்போகமேயுறுந் தேகங்கண்டாய வினைநானெழிந்தாற் றினைப்போதளவுமில்லாதுகண்டாயென்றும, இங்ஙனமீஎவ்வரவாக்கிய ஞானிகள்வாக்கியமிருக்க நீர் பிராரத்தவினையுமபோமெனற தென்னையெனின், எணடுக்கூறியமுறைமையே நிற்றி, யானபிறரென்ப தொழிந்து திருவருளைகண்ணுகச்சென்று சிவதரிசனமபணணி யதிலதீதப்படுகின்ற சிவயோகிபஞ்சகிருததியங்களையுங்கடநது பரமுத்தனைபபோலிருப்பனுதலினனு மவன் பிராரததம் வருவனபோற்றோன்றி யழிவதேயன்றியவனை வாதியாதாகலினனு மவனுக்குபபிராரத்த மின்றென்ப தறிக, இன்னு மப்பிரமாணிக்கவாசகாமுதலாயினோர் சரித்திரங்களினனுங்காண்க.

(யான்பிறரென்பதனல்வினைமெயறுமென்பதற் குதாரணம.)

(திரட்டு.) "தானலா தெனறு தன்னைத் தானெனக் கருதிக்கொண்டே, யானெலாஞ் செய்தேனென்னு ஞானமஞ் ஞானமத்தா, வினைமாம்வினையிரண்டா மிருவினையாலுடமபா, மூனமா ருடம்பாலூழாமூழினா லாகாதுண்டோ".

(சித்தியார்.) "யான்செய்தேன் பிறாசெய்தா ரென்னதியானெனனு மிக்கோணை ஞானவெரியால்வெதுப்பி நிமிர்த்துத், தான்செய்வேலன்றிடவத் தத்துவன்றானேநீ தனையளித்து முன்னிற்கும் வினையொழித்திட் டோடு, நான்செய்தே னெனுமவர்க்குத் தானங்கின்றிகண்ணுவிக்கும யோகத்தைப் பண்ணுவிக்குங் கன்ம், மூன்செய்யாஞானந்தா னுதிபினல்லா லொருவருக்கும யானெனதிங் கொழியா

தன்றே" (சிவஞானதீபம்) "யான்செய்தேன்பிறர்செய்தாரெனுங்கோ ணீங்கி" என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

பிராரத்துவ மின்றென்பதற்குதாரணம். (திருவருட்பயன்.) "மும்மை தரும்பயனு மூளாவா மூதறிவார்க், கம்மையு மிம்மையேயாம்" என்றாசாரியாரும். (எ)

(கவி-அ-அ-கை.)

இருவினையொப்புமலபரிபாக முடையோர்க்குப் பக்குவ நால்வகையாயிருக்குமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அண்டமுதலா யநந்தம் பிறப்பில்விதங்
கொண்டுநரா ராய்வினைகள் கூடொருத்துத் - தொண்டிற்
சரிதாதி செய்து தவச்சார்பி னிற்போர்க்
கரிதான பக்குவநா லாம்.

(இ-ள்.) அண்டமுதலா யநந்தம்பிறப்பில்விதங் கொண்டுநரராய்த் தொண்டிற் சரிதாதி செய்துவினைகள்கூடொருத்து,, எ-து. அண்டசஞ் சுவேதச முற்பிசமசராயுசமென்னு மிந்நான்கினிற் ருேற்று மெழுவகைப் பிறவியிலுண்டாகிய வெண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதங்களினு மநந்த முருக்கொண்டு மாறிமாறிச்சுழன் றவைதொலைத்துப் பின்பு நரவடிவுகொண் டிவ்வடி வநந்தங்கோடியிற் சிவபுண்ணியநேரிட் டச்சிவபுண்ணியத்தாற் சிவத்தொண்டுபூண் டிச்சிவத்தொண்டினுற் சரிதைகிரியா யோகங்களைச்செய் திச்சரிதை கிரியாயோகங்களா லிருவினையொப்பு மலபரிபாகம்பிறந்து?

"தவச்சார்பினிற்போர்க் கரிதானபக்குவநாலாம்" எ-து. உயிர்ச் சார்பு பொருட்சார்புகளை நீத்துத் தவச்சார்பி னிற்போர்க்குக் கிடைத்தற்கரிதாகிய மந்த மந்ததரந்தீவிரந் தீவிரதரமெனப் பக்குவ நான்குள. எ-று. (அ)

(கவி-கூ-அ-கை.)

பக்குவர்க்கு ஞானசாரியனைத் தேடுந்தேட்ட மிங்ஙனம் பிறக்குமென் றித்திருவெண்பாவிற்கூறுகின்றார்.

மேலைச் சுகம்வெறுத்து மேலோர்மொழி மூற்றுவெறுஞ்
சாலப்பொய் யாயுடலார் தானுர்தன் - மூலமா

றொன்றுதெரி விப்பாளை யெய்துவோ மென்றிரண்டா
யொன்றுபடத் தேட்டமுதிக் கும்.

"மேலைச்சுகம்வெறுத்து மேலோடுகீழற்றுவெறுஞ் சாலப்பொய்யா யுடலார்தானார்தன் மூலமாரொன்று" எ-து. மேலாகிய வனிதார்திசுகங்களை வெறுத்து மேலுடையும் பதமுத்திகளினும் பூலோக போகத்தினும்விருப்பற் றவைகளையெல்லா மிகவும் வெறும் பொய்யாய்க்கண்டிவ்வுடலுடன் யாது இதனுளிருந்த நானியாவ னெனக்கு முதலாயுள்ள பதியாதென்று விசாரித் திவை யெம்மா லறியக்கூடுவதில்லை யாகலின்?

"தெரிவிப்பாளை யெய்துவோமென் றிரண்டாயொன்றுபடத் தேட்டமுதிக்கும்" எ-து. இவற்றை யறிவிக்குஞானசாரியனையடைவோ மென்றுகருதித் தானென்றுஞ் சிவமென்று மிரண்டாய்ப் பகுத்தறிவதாயபின்னர்ச் சிவத்தோ டொன்றாக விங்ஙனம் பகுத்தறிவ தொன்றாக்கு மந்தஞானசாரிய ரெங்குளரொன்று தேடுந் தேட்டம்பிறக்கும். எ-று.

ப-ம். முன்போன்மெய்யாய்த் தோன்றுமையின், "வெறுஞ்சாலப்பொய்யாயென்றார். (கூ)

(கலி-ம-அ-கை.)

ஞானசாரியனைத் தேடும்போது பிறக்குங்குண மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

வேர்க்குங்கண் ணீர்ததும்புங் கம்பிக்கு மெய்ந்நடுங்கும்
வார்த்தை நழுவு மனம்பதறுங் - கார்க்கதமாய்க்
காந்துமுரோமாஞ் சலியாகுங் காதலித்தார்க்
கேய்ந்தகுணங் காணிவையெட் டும்.

"வேர்க்குங்கண்ணீர்ததும்புங் கம்பிக்குமெய்ந்நடுங்கும் வார்த்தைநழுவுமனம்பதறுங்கார்க்கதமாய்க்காந்து முரோமாஞ்சலியாகும்" எ-து. உடற்கண் வேர்வை யரும்புங் கண்களி லானந்தநீரொழுகு முண்ணடுங்கு முடனடுங்கும் வசனங் குழறு மாசாரியனை யென்றைக்கடைவோமென்று மனம்விரைந்து நாடு மேகம்போலுள்ளேகுமுறி யுளமெலாம் வெதும்பு முடன்மயிர்க்குச்செறியும்.

"காதலித்தார்க் கேய்ந்தகுணங்காணிவையெட்டும்" எ-து. ஆகிய விவை யெண்வகையும் ஞானசாரியனை விரும்பித் தேடுவோர்க்கியைந்த குணங்களாம். எ-று. (ம)

(கவி-௰௧-அ-கை.)

ஞானாசாரிய ரெதிர்ப்படாதபோ தவர்க் கிங்ஙன மவத்தைகடோ ற்றுமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அனைோட்டஞ் சிந்தை பெருமூச் சறியாச்
சுரமூட்ட மெல்லாந் துறத்த - லுனைதோற்று
மான மவுனம் விகள மறவைசா
வானவினை பத்துமவத் தை.

(இ-ள்.) அனைோட்டஞ்சிந்தை பெருமூச்சறியாச் சுரமூட்டமெல் லாந்துறத்த லுனைதோற்று மானம், எ-து. மனஞ் சகமுகத்தைவிட் டகமுகமாய் நிற்றலி னருக்கியனேக்கமு மெப்போது ஞானாசாரியனை யறிந்தடைவோமென்னுஞ் சிந்தனையு மவனை நினைக்குந்தோறு நெட்டு யிர்ப்பெறிதலு மிந்நினைவு பேலீட்டாற் பிறரா லறியக்கூடாத சுரமே லெழுதலு மிதனு ஞானுறக்க முதலியவெல்லாந் துறத்தலு மிதனை ப் பிறருக் கியாதொன்று சொல்சோமென்று சொலலா தடக்குமான மும்?

"மவுனமவிகளமறவைசா வானவினைபத்துமவத்தை" எ-து. இ மமானத்தா லொருவரோ டொன்றுஞ்சொல்லா திருக்கு மவுனமு மி ங்ஙனங்கூறும் விசாரமேலீட்டாற் பித்தபேறலு மிந்த வவத்தைகள்ப டுங்காலத்து மந்தஞானாசாரிய ரெதிர்ப்பட்டாராயின் மூர்ச்சித்தலு மி றத்தலுமாகிய விவைபத்தும் பக்குவர்க்குத்தோற்று மவத்தைகளா ம். எ-று.

மறவை சாவென்னு மிரண்டவத்தையுந் தீவிரதர பக்குவர்க்கெ னக்கொள்க. (௰௧)

(கவி-௰௨-அ-கை.)

ஞானாசாரியர் தமக்கெதிரோ யெழுந்தருளியபோது பக்குவர்வண ங்கி வினவுமுறைமையு மிவர்க் கவர்பண்ணுந்தீக்கை யிவையென்ப து மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

தேட்டந் திரண்ட திருமேனி யுட்புறம்பாய்க்
காட்டு மளவே கரைபுரண்டு - கேட்ட
வதிபக் குவத்தார்க் ககம்புறமென் றூறு
விதிவைத்த தீக்கையா மெண்.

(இ-ள்.) தேட்டந்திரண்டதிருமேனியுட்புறம்பாய்க் காட்டுமளவே, எ-து. தமதுயிருள் ளிருந்துந் தெரியாது தாந்தேடுந் தேட்டமாகியபே ரானந்தந் தானே திரண்ட ஞானசிரியர் தமதுதிருமேனியை யவர்கண் ணுாக்காணும்படி புறம்பாய்க் காட்டுமாத்திரத்திலே?

"கரைபுரண்டுகேட்ட வதிபக்குவத்தார்க் ககம்புறமென்றீறு வி தினைத்ததீக்கையாமெண்" எ-து. அன்பெனு மாறு கரைபுரண்டெழு ந்து அவ்வாசாரியரைப் பலதரம் வலம்வந் தட்டாங்கமுதலிய வணக்க ஞ்செய்து பின்னெழுந் தஞ்சலியத்தராய் நின் றானந்தக்கண்ணீரொழு க வநேக தோத்திரம்பண்ணி யெமது சுவாமிகளே யடியேங்கட் கிவ்வு டல்வந்தவாறியா திவற்றுளிருந்த யாமியாவ ரெமக்கு முதலாயுள்ள மெய்ப்பொருள் யாதென்றுகேட்க வதிபக்குவ முடையோர்க்கு வே தாகமங்களில் விதித்துவைத்தபடி யவர்பண்ணுந் தீக்கை யகத்தீக் கை மூன்று புறத்தீக்கை மூன்றென் றாறுவகையா யிருக்குமென் ற றிதி. எ-று.

தீக்கைகளாறாவன, திருநோக்கம் பரிசம் வாக்கு பாவனை நூல் யோகமென்பன. இவற்றுட் டிருநோக்கம் பாவனை யோகமென்னு மிம் மூன்றுமகத்தீக்கை. பரிசம் வாக்கு நூலென்னு மிம்மூன்றும் புறத்தீ க்கையெனக்கொள்க.உள்ளென்பதையுயிருள்ளிருந்துமெனக்கொள்க.

(கவி-௰௩-அ-கை.)

ஞானசாரியர் மாணாக்கனுக்குத்தீக்கையான் மும்மலங்களையுந் தற்போதத்தையு நீக்குமுறைமை யித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்து மலமாயைக்
கருமத்தை யெல்லாங் கழற்றிச் - சரிதாதி
வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே
போதைசெய்து போக்கிவிடப் போம்.

(இ-ள்.) பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துமலமாயைக்கருமத்தையெ ல்லாங்கழற்றி" எ-து. பறவை முட்டையைச் * செட்டையாற் பரி சித்தல்போன் மாணாக்கனைக் கரசரணங்களாற் பரிசித்து மாமைகளை க்கணிருந்த முட்டையைத் தன்மனதிற்பாவித்தல்போ லவனைத் தமத ருளுருவாய்ப் பாவித்து மீன் றனது சினையைப்பார்த்தல்போ லவனை த்தமது கிருபைப் பார்வையாற்பார்த்து மாணவமல மாயாமலங் கன் மமலமாகிய வினையெல்லாநீக்கி.

"சரிதாதி வாதனையாம்போத மயக்கத்தை வாக்காலே போதை செய்து போக்கிவிடப்போம்" எ-து. சரிதை கிரியாயோகங்களைச்செ

* செட்டையாற் பரிசித்தல் முதலியன வவ்வவ் முட்டைகட்குத் தம் பருவமடைதற் கென்றறிக.

ய்யும்வாசனையாகிய தற்போத மயக்கத்தை நீக்குதற்கேதுவாகியவுப தேசமொழிகளைத் திருவாக்காற் போதித்துநீக்கப்போம் எ-று.

யோகத்தைப் பாவனையுள்ளடக்கி நூலைவாக்கிலடக்கியவ்வாறை யுமீண்டு நான்காய்க்கூறினார். (மரு)

(கலி-மசு-அ-கை.)

ஆசாரிய ருபதேசித்த பொருள்களை மாணுக்க ரிம்முறைமைக ளா யேற்றுக்கொள்வாரென றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

காலமறை தேசமறை கன்மறைபோற் காண்பாரும
பாலுண்ணும்புள் ளிபபிமீன் பக்கிதிக் - காலு
மிரும்பினீர மின்னலிலே யேற்றபணம் பார்ப்பார்
தரும்பொருளைக் கொள்ளுவார தாம.

(இ-ள்.) காலமறைதேசமறை கனமறைபொற்காண்பாரும,, எ-து. முன்னோர காலத் தோராபொருளை யறியாதிருந்து பின்னோர காலத்த தனையறிந்து கொள்ளுங் காலமறைபோலு மோர்தேசத் தறியாதிருந த பொருளை யோரதேசத் தறிந்துகொள்ளுந தேசமறைபோலுமுன் மணியென் றறியா திருந்தும பின்னதிலேடை மறிவாரோடும்பழகி ம ணியென றறிந்துகொள்ளுங்கன்மறைபோலும பாசாரியர நுக்கிரகித் தபொருளை யறிந்துகொள்ளுவாருமுள ரெ்பதன்றி?

"பாலுண்ணும்புள்ளிபபிமீன்பக்கிதிக்காலுமிரும்பினீர்மின்னலிலே யேற்றபணம்பார்ப்பார் தருமபொருளைக்கொள்ளுவார தாம" எ-து.பா லுண்ணு மன்னப்புடபோலுஞ் சிப்பிபோலு மீனுண்ணுங் கொக்குப் போலு மூலையி லெழுக்காய்ந்த விரும்பினீரபோலு மின்ன லொளியி லேற்கப்பட்ட பணநோட்ட மறிவார்போலு மவரருளிச்செய்தபொரு ளை யங்ஙனமேற்றுக்கொள்ளும் பக்குவருமுளர் -எ-று.

ப-ம். ஆசாரியரநுக்கிரகித்த பொரு ளக்காலத்துத் தோற்றாதிரு ந்து பின்னாட்குப்பின்னர் தம்முள்ளே தெரிந்துகோடலாற் காலமறை யென்று மவர்கொடுத்த நூலிற் றெரியாதிருந் தந்நூற் பொருளைக்கூ று மற்றோர் நூலிற் றெரிந்து கோடலாற் றேசமறையென்றுந்தாங்கற் றநூல் கற்றோரோடும் பழகித் தெரிந்துகோடலாற் கன்மறைபோலெ ன்றுங்கூறினார்.

அன்னம் நீரைநீக்கிப் பாலுண்டாற்போற் சரிதாதிகளை நீக்கிஞானமொழியைக்கோடலாற் பாலுண்ணும் புள்ளென்றும், சிப்பி சோதிமழைக் கங்காந்திருந்து துளிவிழுந்தமாத்திரத்தில் வாய்மூடிக் கொள்ளுதல்போ லெப்போது கூறுவாரொன் றிதையமலர்ந்துகேட் டங்ஙனங் கேட்டபொருளை யுள்ளடக்கிப் பயன்படுத்திக்கோடலா னிப்பியென்றும், கொக்கு துறைக்கண் ணசைவறநின்று மீன்வந்துழிக் கவருதல்போல் சித்திரப்பாவைபோ லசைவறவிருந்து பயன்றருமொழிவருந்தோறு மேற்றுக்கோடலான் மீன்பக்கியென்றும், இரும்புதானேற்கு நீர்மாத்திர மெடுத்துக்கொண் டதனைமீளவிடா திருத்தல்போலத் தமக்குவேண்டிய வுபதேசமொழிகளை யேற்றுக்கொண்டு மீளவிடாதிருத்தலா னிரும்பினீரொன்றும், கட்கூர்மையால் விரைந்து மின்னலொளியிற் பணம்பார்த்ததுபோ லறிவுகூர்மையா லதிசீக்கிரத்திற்கூறியமொழிகளி னருத்தமெல்லாமறிந்துகோடலின், “மின்னலிலேயேற்றபணம்பார்ப்பா” ரென்றுங்கூறினர்.

க-து. காலமறையாதி மூன்றற்கு மின்னகாலத் தின்னபொருளுளதென்று மின்னதேசத்தி னின்னபொருளுளதென்று மின்னமலைக்கப்பா லின்னபொரு ளுளதென்றுந் தமக்காப்தரு யுள்ளவன்கூற வம்மொழியை யுண்மையாகக் காண்பார்போற் காண்பாரு முளரொன்றுமாம். (௰௪)

(கவி-௰௫-அ-கை.)

ஆசாரிய ருபதேசித்தபொருளை யுட்கொண்டபக்குவர் தற்போதமொழிக்கு முறைமை இங்ஙனமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பதியிறக்கக் கேட்டிறந்த பத்தினிபோற் பால்போ
லதிமோகி தீப்புகல்போ லன்பாம் - விதவையர்போற்
கன்னன் கடையிற் கொடைபோலக் காணலர்ந்
தன்னையிழ வாதிழத்த றன்.

(இ-ள்.) பதியிறக்கக்கேட்டிறந்த பத்தினிபோற்பால்போ லதிமோகிதீப்புகல்போ,, எ-து. பதியிறந்தானென்று பிறர்கூறக்கேட்ட வக்கணத்திற் றானுமிறந்த பதிவிரதைபோலுங் கடைகாலிருந்து கவிழ்ந்த பால்போலுந் தனது புருடன்மே லதிமோகியாயிருந்துளா ளவனிறந்த காலத் தவனொடு மக்கினிப்பிரவேச மாதல்போலும்?

"அன்பாம் விதவைபர்போற் கன்னன்கடையிற் கொடைபோல க்காணலாந் தன்னையிழவாதிழத்தருள்" எ-து. புருடனிறந்துபோயபி ன்னரு முன்ன ரன்புவிடாதிருந்த விதவையாபோலு மறுமைகுறித்தி ட்டிய புண்ணியமெல்லா மோரந்தணனுக்குக்கன்னன் றன்றேகாந்திய த்திற்கொடுத்த கொடைபோலு மாசாரிபருபதேசித்த மொழிகளை யு ட்கொண்டபக்குவர் தம்மையொழியா தொழித்தற்கு முறைமையை க்காணபபடும். எ-று.

ப-ம். கேட்டவக்கணத் திறந்தாளைப்போ லுபதேச மொழியைக் கேட்டவக்கணத்திற் போதமிறந்தலின் "பதியிறக்கக்கேட்டிறந்த பத் தினிபோலென்றும்" பாலெல்லாங்கவிழ்ந்ததாயினு மதனுள்வாசனை யி ருத்தல்போற் போதமிறந்ததாயினு மபபோதவாசனையிருத்தலிற்பால் போ லென்றும, சின்னுழிகை சென்றபின்னர் தீப்புகலபோற் சின்னு ளிற் போதமிறத்தலி னதிமோகி தீப்புகல்போலென்றும, புருடனொழி றவாதிருந்து தேகபோகங்களை வெறுத்திருத்தலபோ லியானெனதெ ன்றெழும்போதவெழுச்சியை யடக்கியிருத்தலின் விதவையர்போலெ ன்று மொன்றைபுங்குறியாது கொடுத்தலபோ லொன்றையுங் கருதா து எல்லாவற்றையும் விடுத்தலிற் "கன்னன்கடையிற் கொடைபோ, லென்றுங்கூறினா. (௰௫)

(கலி-௰கூ-அ-கை)

ஆசாரியருபதேசிக்கு மொழியோர்பிரகார மாயினும் பக்குவவுய ர்ச்சி தாழ்ச்சிப்படிஞானமேறுவதன்றி யோர்படித்தாய் ஞானமே ற தென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றா.

மாற்றுப் பலவகையாம் பொன்னோடை வைப்பான்போற்
றேற்றிச் சிவாகமத்தாற் செப்புகினு - மேற்ற
பரிபாகத் தாலே பழுப்பாம பலவு
மொருபாக மன்றென் றுணர்.

(இ-ள்.) மாற்றுப்பலவகையாம் பொன்னோடைவைப்பான்போற் றே ற்றிச்சிவாகமத்தாற் செப்புகினும்,, எ-து. பலவகையாய்த்தோற்றுமா ற்றுப்பொன்களைப் பத்துமாற்று மாக்குதற்பொருட்டுப் புடம்போடு மொருவனைப்போலும் பக்குவர்நால்வர்க்கு மோர்படித்தாற் சிவாகமத் தாற் றெளிவித்துக்கூறினும்?

"ஏற்றபரிபாகத்தாலே பழுப்பாம்பலவு மொருபாகமன்றென்று ணர்" எ-து. மாற்றேற்றமாயிருந்தபொன் பரிபாகத்தான் முன்பழுப் பாகுமன்றிக் குறைந்தமாற் றுயர்ந்த மாற்றுக்களாகிய பலபொன்களு

மொருபாகமாய்ப் பழுப்பாகுவதன் றதுபோ லுயர்ந்த பக்குவனுக்கு முன்னர் ஞானமேறுமன்றி யெல்லார்க்குமோர் பிரகாரமாய் ஞானமேறுதென்றறிதி. எ-று.

க-து. தாழ்ந்தமாற்றுப் பொன்களைப் புடம்போடுந்தோறு மிடை குறைந்து மாற்றுயர்தல்போலத் தாழ்ந்தபக்குவர்க்குச் சிவாகமத்திற் கூறு நானாவுபாய யுத்திகளை யுபதேசிக்குந்தோறும் பாசங்குறைந்து ஞானமேறுமென்பதுங்காண்க. (௰சு)

(கவி-௰எ-அ-கை.)

மந்தமுதலிய நான்கு பக்குவங்களையு முடையோரை ஞானாசாரியர் பக்குவப்படுத்தி யவர்க்கு ஞானமேற்றுமுறைமை யிங்ஙனமென்றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

கல்லையுரு வாக்குங் கழற்றியிலே யில்வாழ்க்கைச்
சில்லநீர் போலத் தெளிந்துவருந் - தொல்லுலகங்
கான்றசோ றாகுங் கதலித்தண் டைக்கனலி
லூன்றல்போன் ஞானமுதிக் கும்.

(இ-ள்.) கல்லையுருவாக்குங் கழற்றியிலேயில்வாழ்க்கைச் சில்லநீர் போலத் தெளிந்துவரும்,, எ-து. கல்லினையோர் பாவை வடிவாக்குமுறைமைபோலருள்வடிவாக்குதற்பொருட்டு மந்தபக்குவர்க் குபதேசமொழிகளாற் பாசத்தை நீக்குமிடத்துத் தேற்றநீர் தெளிந்துவருதல்போ லவர்க்கில் வாழ்க்கை யிலேதா ரியாமாரொன்று தெளிவு பிறந்துவரும்.

"தொல்லுலகங் கான்றசோறாகுங் கதலித்தண்டைக்கனலி லூன்றல்போன் ஞானமுதிக்கும்" எ-து. பழயதாகவரு மிப்பிரபஞ்சங்கக்கினசோறுபோ லருவருப்பாகத்தோற்றும் வாழைத்தண்டை யக்கினியிற் சுடுதல்போ லவர்க்கு ஞானந்தோன்றும். எ-று.

ப-ம். பிறிந்தசேறுந் தெளிந்தநீருங் கலந்துவருதல்போ லில்வாழ்க்கையிற் பற்றும் பற்றின்மையுங் கலந்து வருதலிற் றெளிந்து வருமென்றார். வாழைத்தண்டைப் பன்னாட் பலகாட்டத்தாற் சுடல்போ லிவர்க்குப் பன்னாளிற் பற்பல வுபதேச மொழிகளான் ஞானமேறுமென்பதறிக. (௰எ)

(கவி-௰அ-அ-கை.)

இரும்பைவடி வாக்கு மியல்பினர்க்குப் பச்சை
மரஞ்சுடுமா போன்ஞானம் வாய்க்கு - மிருந்தவிட

நீர்த்தா மரையிலைபோ னீங்கு மூலகமெலாம்
பேய்த்தேர்போற் றோன்றும் பிரிந்து.

(இ-ள்.) இரும்பைவடிவாக்கு மியல்பினர்க்குப்பச்சை மரஞ்சுடுமா போன்ஞானமவாய்க்கும்,, எ-து. இரும்பினையோர் பாவைவடிவாக்கு முறைமைபோற் பாசத்தைநீக்கி யருள்வடி வாக்கப்பட்ட மந்ததர பக்குவர்க்குப் பச்சைமரத்தை யக்கினியாற் சுடுமாறுபோன் ஞானம்பலிக்கும்.

"இருந்தவிட நீர்த்தாமரையிலைபோ னீங்குமுலகமெலாம் பேய்த்தேர்போற்றோன்றும்பிரிந்து" எ-து. தாமிருந்த வில்வாழ்க்கை தாமரையிலை நீர்போற் கூடியிருந்து மதிற்கூடாது நீங்குவர் பிரபஞ்சமெல்லா மவர்க்கன்னியமாகக் கானற்சலம்போற்றோன்றும். எ-று.

க-து. சிலகாட்டத்தாற் பச்சைமரஞ் சுடல்போற் சிலவுபதேசமொழிகளா லிவர்க்கு ஞானமேறுமென்பதறிக. (௰அ)

(கலி-௰௬-அ-கை.)

இதுவுமது.

மரப்பாவை போலுடம்பின் வாதனையை மாற்றிக்
கரிதீக் கவர்வதுவாங் காமித் - திருந்த
மனைபொதுவின் மண்டபமாம் வானோர்கள் வாழ்வுங்
கனவெனவே தோன்றியிடுங் காண்.

(இ-ள்.) மரப்பாவைபோலுடம்பின் வாதனையைமாற்றிக் கரித்தீக்கவர்வதுவாம்,, எ-து. மரத்தினையோர்பாவைவடி வாக்குதல்போ லருள்வடிவாக்குதற்பொருட்டுத் தீவிரபக்குவர்க் குடம்பின் வாதனையாய பொறிகரண முதலியவற்றைநீக்கி ஞானத்தையுணர்த்தக் கரிதீயேற்றுக்கொளல்போன் ஞானமுண்டாம்.

"காமித் திருந்த மனைபொதுவின் மண்டபமாம் வானோர்கள்வாழ்வுங் கனவெனவேதோன்றியிடுங்காண்" எ-து. தானிச்சித்திருந்த மனைவாழ்க்கை நாலுபேருங் கூடியிருக்கும் பொதுமண்டபம்போ லாகுங் கேள்வியாலறியப்பட்ட விந்திராதி தேவர்கள்செல்வமுஞ் சொற்பனம்போற்றோற்றும. எ-று.

ப-ம். உடம்பின் வாதனையைமாற்றி யென்றமையா னிவர்க்குப் போகவாதனை மாற்றவேண்டுவ தின்றென்பதாயிற்று. வானோர்கள்வாழ்வுங்கனவெனவேதோன்று மென்றமையா னரர்வாழ்வு சுழுத்திக்காட்சிபோற் றோன்றுமென்பதாயிற்று. இருந்தவென்பது இருத்தவென்றுவலித்தல் விகாரமாய்வந்தது. (௰௯)

(கவி-உ௰-அ-கை.)

இதுவுமது.

வெண்ணெயுறு பாவையர்க்கு ஞானம் விளக்கின்மே
லண்ணின்மயிர் பஞ்சாகு மாசையிலே - கண்ணீ
ரொழுகும் பொழுதறியா துள்ளுருகி விம்மி
யழுதுசிரிப் பார்புளக மாம்.

(இ-ள்.) வெண்ணெயுறு பாவையர்க்கு ஞானம் விளக்கின்மே லண்ணின்மயிர் பஞ்சாகுமாசையிலே,, எ-து. வெண்ணெயினைப்பொருந்தாநின்ற வோர்பாவை யாக்குதல்போ லருள்வடி வாக்கப்பட்ட தீவிரதரபக்குவர்க்கு விளக்கின்கொழுந்திற் பிடித்த வண்ணிலின் மயிர்போலும் பன்னியபஞ்சுபோ லும் பாசநீங்கி ஞானமுண்டா மவர்க்கொன்றினு மாசையின்று.

"கண்ணீ ரொழுகும்பொழுதறியாதுள்ளுருகிவிம்மி யழுதுசிரிப் பார்புளகமாம்" எ-து. ஆனந்தக் கண்ணீரோடும்போதுந் தாமறியாதுள்ளமெல்லா நெக்குநெக்குருகி விம்மிவிம்மியழுது சிரிப்பாரவர்க்குடம்பெல்லாம் ரோமாஞ்சலியாம். எ-று.

ப-ம். அழுவது முன்பட்டபிறவித்துன்பங்களை நோக்கி. சிரிப்பது துன்பங்களையெல்லா மொருகணத்தின் மாற்றிய வாசாரியர ததிசயத்தைநோக்கி யெனக்கொள்க. பிரபஞ்சத்தின்மே லில்வாழ்க்கைமே லுடம்பின்மேலாகிய மூன்றிடத்து மவர்க்காசை யின்மையாற் பொதுப்படவாசையிலேயென்றார். (உ௰)

(கவி-உக-அ-கை.)

இங்ஙனங்கூறும் பக்குவர்க்கேயன்றி மற்றையர்க்கு ஞானம்போதித்தா லேலுறுதோவெனின், பக்குவமுடையோர்க்கே ஞானம் போதித்தாற் பாசநீங்கி யாநந்தப்பேறுளவாமன்றி மற்றையர்க் கங்ஙனமுண்டாகாதென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

புளிசேர் பழமானுற் போற்புறம்போ டுள்ளின்
முளைதானும வேறாய் முளைபோய்த் - துளைமாண்ட
வூசிக்குப் பாச மொழிந்ததுபோ லொப்பாருக்
காசைக்கே டானந்த மாம்.

(இ-ள்.) புளிசேர்பழமாறுற்போற் புறம்போமுள்ளின் மூளைதானு ம் வேறாய்மூளைபோய்,, என்-து. முன்னர்ப் பிஞ்சாயிருந்தபோதோடும் வித்தும்பிறிபடா தொன்றாய்ச்சேர்ந்தபுளி யவ்வோடும் வித்தும் பிறிப டும்பழமாறுற்போன் முன்ன ரறிவுமுதிராமையிற் பிறிபடாதிருந்தமு ம்மலங்களு மிப்போ தவ்வறிவு முதிர்ந்தமையான் மாயைகன்மமாகிய புறம்போ டியிருள்ளிருந்த மூளையாகிய வாணவமுந் தமக்கன்னியமா ய்நீங்கி யிவற்றா னேறுவதாயவாகாமிய மூளையும்போய்?

"துளைமாண்ட வூசிக்குப்பாசமொழிந்ததுபோ லொப்பாருக்கா சைக்கேடானந்தமாம்" என்-து. காதற்ற வூசிக்குச் சரடொழிந்ததுபோ ற் றற்போதத்தோ டெல்லாப் பாசங்களையு மிங்ஙனமொழிந்தோர்க்க ப்போதத்தாற் றோற்றுமாசை நாசமே சிவாநந்தப்பேறாம். எ-று.

ப-ம். மாயையுங் கன்மமும் புறம்பாய்க் காணப்படுதலிற் புறம பென்று மவை நீங்கியபோதுந் தானீங்கா துயிருள் ளிருத்தலி ணவ த்தை யுள்ளின் மூளையென்று மாகாமியம் பிறவிக்கேதுவாகலி னித னையு மூளையென்றுங்கூறினார்.

காதறாமுற் றொடர்ந்த பாசமஃதற்றபோ தொழிந்தாற்போற் போதமறாமுற் றொடர்ந்தபாச மஃதற்றபோ தொழிதலி னூசிக்குப் பாசமொழிந்தாற்போ லொப்பாருக் கென்றார்.

தேகபோகங்களாகிய துன்பத்தை யின்பம்போன் மாறுபாடாய்த் தோற்றுவித் துயிர்க்காசை யுண்டாக்குவ தாணவம், அதனது வாச னை போதமொழியுமளவு மிருத்தலி னதன்காரியமாகிய வாசைகெட வே காரணமாகிய வவ்வாணவவாசனையு மவ்வாசனையாலெழும் போ தமுங் கெடுமாகலி னாசைக்கே டானந்தமா மென்றார். (உக)

(கவி-உஉ-அ-கை)

பக்குவர்க்குப் பாசநீங்கி ஞானோதயமானபோது தோற்றுமதிச யகுண மிவையென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அருண னுதையம்போற் றும்வீழ்வா ராசை
பெருகுவபோற் கப்பற் பிழைத்துக் - கரைகாணு
மாபோற் சிறையு மரும்பிணியு நீங்கியிடு
மாபோ லதிசயம்போ லாம்.

(இ-ள்.) அருணனுதையம்போற் றும்வீழ்வாராசை பெருகுவபோற் கப்பற்பிழைத்துக் கரைகாணுமாபோல்,, என்-து. மழையிருளி னேறி தெரியாதுழல்வோர்க்குச் சூரியனுதயமானதுபோலுந் தம்மூரில் விரும்

பப்பட்டமாதர்மேலாசை யுள்ளமுமறைய மேன்மேல்வளர்தல்போ லுந் திசைதவறியகப்பல் தப்பித்துறைசேரக் காணுமாறுபோலுஞ்?

"சிறையுமரும்பிணியுநீங்கியிடு மாபோலதிசயம்போலாம்" எ-து. வீடாச் சிறையிருந்தோர்க் கச்சிறைநீங்கியவாறுபோலு மாருநோயர் க் கந்நோய்நீங்கியவாறுபோலு மோர்காலமுங் காணுதவதிசயங் கண் டதுபோலுந் திருவருண் ஞானம்பெற்றோர்க்குத்தோற்றும். எ-று.

ப-ம். முன்னராணவ விருளாற்பொய்யிது மெய்யிதுவென் றோன் றுந்தோன்றாதிருந்தோர்க் கிப்போ தருளொளியா லெல்லாஞ்சிவமாய் த்தோற்றலின், அருணனுதயம்போ லென்று மவ்வருண்ஞானத்தாற் றோன்று மாநந்தத்திற் றமேன்மேல்மறைதலிற் "றும்வீழ்வாராசை பெருகுவபோலென்று மிந்தஞானநந்தத்தை யென்றைக் கடைவோ மென்றிருந்ததமக் கிப்போதுகிடைத்தலிற் "கப்பல் கரைகாணுமா போலென்றும், முன்னுடலாயிருந்ததா மிப்போ ததற்குட்புறனுயவிள ங்குஞ் சிவமாயிருத்தலிற் "சிறைநீங்குமாபோலென்றும், முன்னிருந் த பிறவித்துன்ப மிப்போது நீங்கலிற் "பிணிநீங்குமாபோலென்றுமோ ர்காலங்களினுங் கண்டறியாத காட்சியாகலி "னதிசயம்போலென்று ங்கூறினர். (உஉ)

(கலி-உரு-அ-கை.)

பாசநீங்கி ஞானந்தோன்றின லவர்க் கிக்குணங்க டோற்றுவவெ ன்னையெனின், முன்னோர்காலங்களினுங் கண்டறியாராகலி னிப்போ தக்குணங்க ளவர்க்குத் தோற்றுமென் றித்திருவெண்பாவிற் கூறுகி ன்றார்.

உடல்பொறிக ளுட்கரணத் தோடுகுணம் வாயு
விடவிடவே நாதாந்த வீடு - நடுநிலையாய்த்
தன்னொழிவும் பேரின்ப சாகரமுஞ் சந்தழிவா
ரென்னபடார் கண்டறியா ரே.

(இ-ள்.) உடல்பொறிக ளுட்கரணத்தோடு குணம்வாயுவிடவிடவே நாதாந்தவீடும்,, எ-து. உடலமும் பொறிகரணங்களு மந்தக்கரணங்க ளு மவற்றுடனே குணங்களும் பிராணவாயுவுமாகிய விவ்வைந்தையு மொன்றொன்றாயறிந்து நீங்க நீங்கவேவரு நாததத்துவத்தின் முடிவா கிய விடுதலையையும்?

"நடுநிலையாய்த் தன்னொழிவும்பேரின்ப சாகரமுஞ்சந்தழிவாரெ ன்னபடார்கண்டறியாரே" எ-து. அவ்விடுதலைக்குஞ் சுகாதீதத்திற்கு

நடுநிலையாய்த் தோன்றுந் தற்றெரிசனந் திருவருட்டெரிசனம் பரா தெரிசனம் பராயோகம் பராயோகநீக்கத்தையு மவற்றின்மேற் றற்போதவொழிவையு மதன்மேலாநந்தசாகரத்தையு மநுபவமாகக்கண்டதன்மேற் சிவத்தோ டிரண்டற்றிருக்கின்றாரென்ன வாச்சரியப்படார் முன்னோர்காலங்களினு மவற்றைக்கண் டறியார்தார். எ-று.

ப-ம். உடலத்தை யுள்ளபடி யறிந்துநீங்கவே பஞ்சபூதகாரியமாகிய புறக்கருவிக ளிருபத்தைந்து மீடணைத்திரையங்களுந் தசநாடிகளுநீங்கும். ஞானேந்திரியங்களை யுள்ளபடியறிந்து நீங்கவே யவற்றா னபகரிக்கப்பட்ட சத்தாதிகளைந்து மவ்விந்தியங்க ளவ்விடயங்களை யபகரித்தபோது தொழிற்படுங் கன்மேந்தியங்களைந்தும் விடையிகரிக்கப்பட்ட வசனாதிகளைந்து மிவ்விருவகை யிந்தியங்கட்கு மிடமாய்நின்ற பூதங்களைந்து நீங்கும். அந்தக் கரணங்களை யுள்ளபடியறிந்து நீங்கவேசூக்குமையாதி வாக்கு நான்குநீங்கும். முக்குணங்களை யுள்ளபடியறிந்து நீங்கவே யிம்முக்குணகாரமான மூலப்பிரகிருதி நீங்கும். மூலப்பிரகிருதி நீங்கவே யிதாகிதங்களாய்வருங் கன்மஞ் சீவனையின்றி நிற்குமாகலின், அக்கன்மத்தைக் கூட்டாநின்றகாலமு மதனைவரைந்துநிற்கின்ற நியதியு நீங்கும். இவைநீங்கவே யான்மாவிற்குப் புசிப்பின்மையானிச்சாஞானக்கிரியை சீவியாதாகலிற் கிரியையை யெழுப்புங்கலையு மறிவையெழுப்பும் வித்தையு மாசையை யெழுப்பு மிராகமு மாசைப்பட்ட பதார்த்தத்தின்மயங்கும் புருடனும் நீங்கும். இங்ஙனங் கலாதிகணீங்கவே காலத்தையு நியதியையுங் கலையையும் பிரேரித்த சத்தி தத்துவமும் வித்தையைப்பிரேரித்த சுத்தவித்தையு மிராகத்தைப் பிரேரித்த விஸ்வர தத்துவமும் புருடனைப்பிரேரித்த சிவதத்துவமு மூலப்பிரகிருதியைப் பிரேரித்த சாதாக்கியதத்துவமு நீங்கும். இங்ஙனஞ் சுத்ததத்துவங்கணீங்கவே பிராணவாயுவுமாத்திர மியங்கு மிப்பிராணவாயுவை யுள்ளபடியறிந்து நீங்கவே தசவாயுக்களு மசபை நாதமுநீங்கு மிம்முறையே தத்துவந் தொண்ணூற்றாறு நீங்குமாகலின், விடவிடவே நாதாந்தவீடும் என்றார்.

நடுநிலையா யென்றதனானும் பேரின்ப சாகரமு மென்றதனானுந் தற்றெரிசன முதலிய வருவிக்கப்பட்டது.

கண்டத்தானத்தி லந்தக்கரணங்களோடுங்கூடிமத்திமைவாக்கை நன்றா யறியப்படுதலின் மத்திமைவாக்குக் காரணமாகிய சூக்குமை பைசந்தியு மத்திமையாற் காரியப்பட்ட வைகரியு மந்தக்கரணங்களை

நீங்கவே நீங்குமாகலி னந்தக்கரணங்களை நீங்கவே சூக்குமையாதிவா க்குகணீங்குமென்று சொல்லப்பட்டது. பிராணவாயு வியக்கத்தை யடக்கத்தொடங்கி னடங்காது மேன்மேலியங்கு மாகலினின், அவ்வியக்கத்தைத் தன்னு லறியப்படுதலானுந் தன்னை யஃதறியாமையானு மதனைச் சடமென்று மதனையறிந்தவறிவு தானென்றுந் தனக்கறிவித்தது திருவருளென்றுமறிந்து தான் றிருவருணுட்டத்தி னிற்கவே மதுநீங்கு மெனக்கொள்க. கண்டறியாரோ வென்றதனு லிப்போது கண்டெனபது வருவிக்கப்பட்டது.

உடல்பொறி கரணமுதலிய கருவிகளை யுள்ளபடியறிந்து நீங்குதலை "ஐம்புலனாலா மந்தக்கரணமூக்குணமிருவளியொருங்கியவாறோர்த்த நின்றனை" என்னுந்திருவெழுகூற்றிருக்கையாற்காண்க. (உரு)

(கவி-உ௬-அ-கை.)

இங்ஙனம் ஞானத்தாற் பாசத்தை நீங்கிப் பதியையடைந்தோரைமீட் டப்பாசமயக்காதோ வெனின், தற்போதமிழந்த ஞானிகள்சிவமயமாயிருப்பாரேயன்றி யவரைமீட்டும் பாசமயக்காதென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அறிவு மறிவானு மறியா மலேயு
மறியிற் றடையே தவர்க்குப் - பிறிவரோ
வர்காயஞ் சூறைகொளி லஞ்சி யடுக்களைக்குட்
போகாது போலாம் பொருள்.

(இ-ள்.) அறிவுமறிவானுமறியாமலேயு மறியிற்றடையே தவர்க்குப் பிறிவரோ,, எ-து. உயிர்க்குயிரா யுள்ளும்புறம்பு மோரணுவளவேனும் விட்டுநீங்கா திருந்தறிவிக்கு மறிவாகிய பதியையுந் தற்சுதந்திரமாயொன்றினையுமறியா தப்பதியறிவிக்க வறிவதாகிய பசுவையு மிங்ஙனமறியும் பசுவிற்குத் தன்னையுந் தனக்கறிவிக்கும்பதியையு மறியவொட்டாது மன்றத்திருந்த வறியாமையாகிய பாசத்தையு மப்பதியாலுள்ளபடி யறியினவர்க்கு முன்போலுந் தடையாது, அஃதன்றியப்பதியை யோர்கணமேனும் பிறிவரோவாறு லப்பதியை யவர்பிறியாது நாடிக்கொண்டு நிற்பரோவெனின்?

"ஆகாயஞ்சூறைகொளி லஞ்சியடுக்களைக்குட் போகாதுபோலாம்பொருள்" எ-து. எல்லாப்பொருள்கட்கு மிடங்கொடுத்திருந்த வா

காயந் தானே யப்பொருள்களைக் கொள்ளைகொள்ளுமெனி னதற்கு ஞ்சி யடுக்களைவீட்டிற் புகுந்தொளிக்கக்கூடாததுபோ லவ்வாகாய முதலிய வெப்பொருள்கட்கு மாதாரமாகி யிருந்துள்ள மெய்ப்பொரு டன்னையறிந்தோர்க் கிடம்வேறின்மையா னவனை விழுங்கிக்கொள்வ தாம். ஏ-று.

ப-ம். பாசத்தையறியும்போது முப்பத்தாறு கருவிகளையு மிஃதீ தென்றறிந்துசென் றவற்றின் முடிவினின்ற தன்னு லவைவறியப்பட லானுந் தன்னை யவையறியாமையானுந் தனக்கன்னியமென்றுஞ் சட மென்று மறியப்படுந் தன்னையறியும்போ தக்கருவிகளையெல்லா மறிந் தவற்றை நீங்கிநின்றவறிவு தானென்றுந் திருவருளாலன்றித் தற்சுதந் திரமா யறிவதிலனென்றுந் தான் கருவிகளோடுகூடியபோ தவைமய மாயு மவற்றைநீங்கித் திருவருளோடு கூடியபோ திதன்மயமாயுமிருத் தலிற் றன்பாசவறிவுமன்று பதியறிவு மன்றென் றறியப்படும். பதியை யறியும்போது பெத்தமுத்தி காலத்தினுந் தன்னைவிட்டு நீங்காதிருப்ப தென்றுந் தனக்கறிவிப்பதென்றும் பாசத்தைப்பிரேரகம்பண்ணுவதெ ன்றும் ஞானைந்தச் சொரூபமென்றுமறியப்படு மிங்ஙன நடுநின்றறிந் த பசுபாசத்தை நீங்கிப் பரிபூரணமாகிய பதியையடைந்தப் பூரணமெ ல்லாந் தானுயிருத்தலி னறிவிற்றடையேதவர்க்கென்றும் பிறிதற்கே துவாய போதமிறத்தலிற் பிறிவரோவென்று மிங்ஙனம் பிறியா திருந் தோரை மெய்ப்பொரு டன்மயமாய்க்கோடலி "னடுக்களைக்குட்போ காதுபோலாம்பொரு ளென்றுங் கூறினர். (உ௯)

(கவி-உ௫-அ-கை.)

இதுவுமது.

பொய்போல மெய்யு மறியப் பெறுப்போக
சையோகர்க் கென்றேனுஞ் சார்பில்லை - துய்ய
விழிக்கு ளுதித்த விரிகதிர்போற் றம்மை
யழித்ததுவே யாச்சரிய மாம்.

(இ-ள்.) பொய்போல மெய்யு மறியப்பெறுப்போக சையோகர்க் கென்றேனுஞ்சார்பில்லை,, ஏ-று. முன்னர்ப் பொய்யாகிய வுடலத்

தோடுங்கூடியபோ தவ்வுடலமென்றுந் தாமென்றும் பிறித்தறியா த
தன்மயமா யிருந்ததுபோ லிப்போது மெய்ப்பொருளையுந் தம்மையும்
பிறிக்கப்பெறு திம்மெய்ப்பொரு ளாநந்தத்தோடுங்கூடிக் கலந்திருந்
தோர்க் கோர் பொருளோடுஞ் சார்பில்லை யஃதெங்ஙனமெனின்?

"துய்யவிழிக்குளுதித்த விரிகதிர்போற்றம்மை யழித்ததுவே யா
ச்சரியமாம்" எ-து. எல்லாவற்றையு மெதிரிட்டறியு மாசற்ற விழிக்கு
ள்ளே முன்போ லெதிரிடவொட்டா துதித்த சூரியனைப்போன் ஞா
துருஞான ஞேயமென்னுந் திரிபொருளையு மெதிரிட்டறிந்த வான்ம
போதத்தை யங்ஙன மெதிரிடவொட்டா திதனுட்சிவசூரியனுதித் தப்
போதத்தை யழித்துத் தானாயிருந்ததுவே மிகவு மதிசயமாம். எ-று.

க-து. கதிர் புறம்புதித்தபோதுகண்ட கட்குள்ளுதித்தபோது கா
ண்டற் கிடமின்மைபோற் போதத்தாற் புறம்புபோற்றோற்றிய ஞான
சூரிய னிப்போதவொளியைத் தன்னொளியான்மறைத் துயிர்க்குள்ளு
தித்தமையா னிதற்கு மெதிரிடுதற்கிடமின்றென்பதறிக. (உ௯)

(கவி-உசு-அ-கை.)

இதுவுமது.

தன்னையிழப் பார்க்கென்ன சார்வூழி சங்கார
மென்னிலொளித் தெங்கே யிருக்கலா - முன்னே
புலிபார்க்கப் போனகதை போலிமையா நாட்டஞ்
சலியாமன் மூடுந் தனே.

(இ-ள்.) தன்னையிழப்பார்க்கென்ன சார்வூழிசங்கார மென்னிலொ
ளித் தெங்கேயிருக்கலாம்,, எ-து. தற்போத மொழிப்பார்க்கு மற்றை
ச்சார்புக ளென்னையுள்ளன. முப்பத்தாறு தத்துவமென்பது மவற்றி
ன் முடிவினின்ற தாமென்பதுந் தமக்கறிவித்த வருளென்பது மிதனை
க்கடந்த வாநந்த மென்பதுமின்றி யானந்தாதீதராயிருந்தவி னவர்க்
கிதுவே சர்வசங்காரகாலமென்று மெய்ஞ்ஞானிகள் சொல்லுவாரெ
னி னவர்க் கெவ்விடத் தொளித்திருக்கலாகும். ஆனாற் சிவத்தை யரு
ளாலறிந் தடையவேண்டுமென்ப தென்னையெனின்?

"முன்னே புலிபார்க்கப்போனகதைபோ லிமையாநாட்டஞ் ச
லியாமன்மூடுந்தனே" எ-து. முன்னே புலியினைப் பார்த் தறியச்சென்

ச்சிவத்தி லதீதப்படுதற்கேது. "சொன்னூ ரவத்தைகளைந்து,, மென்ற திவையெனக்கொள்க.

"உச்சியிலேசொன்னூ ரவத்தைகளைந்து" மென்றமையா னவ்வுச்சி சேர்படுதற்கேதுவாகிய வவத்தைகளைந்திளையுஞ் சொல்லப்பட்டது.

இருளைப்போற்கேவலம். முடுக்களைப்போற் சகலம். உடுவின்றி யிருளைமாத்திரங் காணுங்கண்போலவு மிருளிடத்துடுவொற்காணுங் க ண்போலவுங்கேவல சகலங்களையறியுமான்மா சூரியவுதய்த்தி லிருளு முடுவுமின்றிச் சூரியப்பிரகாச மாத்திரங்கண்ட கண்போலருடோற்றி யகாலத்து முன்ருேன்றியகேவலவிருளுங் கருவிக்கூட்டங்களுந் தோ ன்ரு தவ்வருளைமாத்திரங் கண்டுகொண்டிருப்பதருட்டரிசனம். சூரிய ப்பிரகாசத்தைக்கண்ட கண் புடைபெயர்ந்து நோக்கா தச்சூரியப் பிர காசத்திலே கீபாவமாய்கிற்பதுபோ லருளென்றுந் தானென்றுஞ் சிறி துந் தோன்ருதவ்வருளேதானுய் நிற்பதுபரைதரிசனம்.

சூரியப்பிரகாசத்தைவிட்டச்சூரியனது வட்டப்பளபளப்பைப்பா ர்த்தகண்போலான்மா பரையைநீங்கி யானந்தபோதம்பெறுதல். சூரி யனது வட்டப்பளபளப்பைப் பார்த்தகண்டன்பார்வையு மிழந்தப்பள பளப்பாகியகாட்சியையுமிழந்தச் சூரியனுள தீதப்பட்டதுபோ லானந் தபோகத்தைப் பெற்றவான்மாவதனைப்பெற்ற தானென்பதுமவ்வான ந்தமென்பதுமின்றியவ்வானந்தந் தானுயதனுள தீதப்படுவதீண்டிருவ கையாய்க் கூறியவவத்தைகட்குவமை யிதனூனுங்காண்க. (௬)

(கவி-௰-அ-கை.)

அந்தஞானத்தைநீர் கூறியநின்மலாவத்தையினின்று பெறுவதே யன்றித் துறவின்கண்ணின்று தவத்தைப்பண்ணிப்பெறக்கூடாதோ வெனின், கருவிகளினதுண்மையைக்காணினெல்லாம் பொய்யாய்வி ட்டு ஞானந்தோன்றுமன்றித் தவத்தானங்ஙனம்விடுதலு ஞானந்தோ ற்றலுமின்றென் றித்திருவெண்பாவிற்கூறுகின்ருர்.

மெய்யாகத் தோன்றிவிடும் பொய்யை விசாரிக்கிற்
பொய்யாய்ச் சுவர்ப்பாம்பாய்ப் போமன்றி - யையா
தொழிலைச் செயிற்ருனுஞ் சோரனைப்போற் ருேன்றிக்
கழலப் பறையறைதல் காண்.

(இ-ள்.) மெய்யாகத்தோன்றிவிடும் பொய்யைவிசாரிக்கிற்பொய்யாய்ச்சுவர்ப்பாம்பாய்ப்போமன்றி யையாதொழிலைச் செயில்" எ-து. விசாரியாதப்டியினாலே மெய்யாகத் தோன்றும் பொய்யாகிய கருவிக்கூட்டங்கள துண்மையை நின்மலாவத்தையினின்று விசாரித்தறியிற் சுவரிலெழுதிய பாம்புபோலாய்ப் பொய்யாய்த் தோன்று மஃதன்றி யவற்றை யங்ஙனம் விசாரித்தறிந்து நீக்காது வைத்துக்கொண் டவைபோம்படிக்கு மாணாக்கனே நீதவத்தொழில்களைச் செயதியெனினது தான்?

"தானுஞ் சோரனைப்போற் றோன்றிக் கழலப்பறையறைதல்காண்" எ-து. சடமாகிய கட்டையைத் தீபத்தாற் பாராதபடியினாற் கள்வனைப்போற் றோன்றக்கண்டுவெருண் டக்கள்வ னீங்கும்படிக்குப் பறையறைத லோடொக்கும். எ-று.

உ-ம். சுவரிலெழுதிய பாம்பிற்குத் தோற்றவு மாத்திரமேயன்றிச் சேட்டையின்றாயதுபோற் கருவிகளை யெதிரிட் டறிந்தபோதுபிரபஞ்சக் தோற்றவு மாத்திரமேயன்றி முன்போற் சேட்டியா தாகலினங்ஙன முவமைகூறினார். நின்மலாவத்தையினின் றருட்கண்ணாலெதிரிட்டுப்பார்க்கும்போது சடமாய் நீங்குங் கருவிகளை மெய்யாகக்கருதிக்கொண்டவைநீங்கும்படிக்குத் தவத்தொழிலைச் செய்யத்தொடங்கினமையா லிங்ஙன முவமைகூறினார். (ம)

(கவி-மக-அ-கை.)

கருவிகள துண்மையை யறிந்தா லெல்லாம் பொய்யாய்ப் போமென்றீ ரப்பிரபஞ்சமுந் தேகமும் பரிச்சேதமின்றாய்ப் போமோ வெனின், கருவிகள துண்மையறிந்தவிடத்துத் தேகாதிப்பிரபஞ்சங்கள் முன்போன் மயக்குதலின்றிக் காட்சிவாதனை மாத்திரையாய் நிற்குமென்றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

உலகத்தை மாயா வுடலைப்பொய் யென்றா
லலகைத்தேர் போலறிவ தல்லால் - விலகித்
துடைத்தொழித்த லாகுமோ சொற்பனத்தீச் சூழ்ந்தாற்
கூட்டீகவிடுஞ் சாக்கிரம்போற் காண்.

(இ-ள்.) உலகத்தை மாயாவுடலைப் பொய்யென்றா லலகைத்தேர் போலறிவதல்லால் விலகித் துடைத்தொழித்த லாகுமோ" எ-து. மா

யாகாரியமாகிய விப்பிரபஞ்சத்தினையு முடம்பினையும் பொய்யென்றறி வித்தாற் பேய்த்தேர்போற் பொய்யாகக் கண்டறிவதன்றி யத்தேகாதி பிரபஞ்சங்களைப் பரிச்சேதமாய் நீக்கித்தள்ளியொழிக்கக்கூடுமோ, நீரிங்ஙனங்கூறியவாற்றான் ஞானமு மஞ்ஞானமுங் கூடியிருக்குமோ வெனின்?

"சொற்பனத்தீச்சூழ்ந்தாற்கடக்கவிடுஞ் சாக்கிரம்போற்காண்" எ-து. சொற்பனவத்தையி லொருவனைக்கடக்கும்வழியின்றி யக்கினி சூழ்ந்துகொண்டா லவ்வக்கினியைக் கடக்கவிடுஞ் சாக்கிராவத்தை போ லுன்னைச் சூழ்ந்துகொண்டுநின்ற தேகாதிப் பிரபஞ்சங்களை ஞானசூரியன் வந்துதோன்றி லுனக்குப் பொய்யாகக் காட்டிவிடுமென்ற றிதி. எ-று.

ப-ம். பேய்த்தேர் நீரைப் பொய்யென்று கண்டபோது நீர்போற் றோற் றாவு முன்னர் மெய்யென்றுகண்ட வாசனையு மிருக்கும், சொற்பனத்தீயைக் கடக்கவிட்ட சாக்கிரத்தி லத்தோற்றரவின்றி முன்கண்ட வாசனைமாத்திர மிருக்கு மங்ஙனம் போற் சுத்தா வத்தையினிற் போர்க்குஞ் சுத்தத்தி னிற்போர்க்கும் பிரபஞ்சத்தோற்றுமாகவிரவை விரண் டுவமையுங்கூறினார். (௰க)

(கலி-௰உ-அ-கை.)

கருவிகள் முப்பத்தாறையும் பொய்யாகக்கண்டு நீங்கினு லந்த ஞானந் தோன்றுமோவெனின், கருவிகளனைத்தும் பொய்யாக வுள்ள படி யறிதலே ஞானமென் றித்திருவெண்பாவிற்கூறுகின்றார்.

பொய்யென்ற வார்த்தை புரையற்று மெய்யானுன்
மெய்யென் பதுதேட வேண்டுமோ - மையிருளைத்
தீர்த்த வெயிலைத் திரும்பி யசைத்திமைத்துப்
பார்த்ததிலென் சந்தையம்வைப் பாய்.

(இ-ள்.) பொய்யென்றவார்த்தை புரையற்றுமெய்யானுன் மெய்யென்பதுதேட வேண்டுமோ" எ-து. கருவிகளெல்லாம் பொய்யென்று நீ சொன்ன வார்த்தைபோற் குற்றமற் றுனதறிவிற் கவைபொய்யென்ப துண்மையாய்த் தோற்றுமெனின், மெய்யாகிய ஞான மென்பது வே

றுதேட வேண்டுமோ, வவத்தையைப் பொய்யாய்த் தோற்றுவித்தது தானே ஞானமன்றோ வாயி னிங்ஙனந்தோற்றுவித்தஞானத்தையான் கண்டுகொண்டிருக்க வேண்டாவோவெனின்?

"மையிருளைத் தீர்த்தவெளியிலேத்திரும்பி யசைத்திமைத்துப்பார்த் ததிலென்சந்தையம் வைப்பாய்" எ-து மயக்கமாகிய வாணவ விருளைத்தீர்த்த ஞானப்பிரகாசத்தை யுன் போதந்தா லெதிரிட் டசைத்துப் பார்த்து மங்ஙனம் பாராதொழிந்து மந்த ஞானப் பிரகாசத்தை யீதம்பு தாமோ வன்றோவென்று நீயென்னை யையுறுகின்ற யங்ஙனமையுறாத தனு ளசைவற நிற்றி. எ-று.

ப-ம். சூரியப்பிரகாசத்தா விரு ணீங்கி யப்பிரகாசத்தைக்கண்ட கண் ணிதப்பிரகாசமோ வன்றோவென் றதன்மேலையுறா தவ்வொளி பி லேகிபாவமாய் நிற்பதுபோ லருளி லசைவறநிற்கவேண்டுமாகலின ங்ஙனமுவமை கூறினார். (௰௨)

(கவி-௰௩-அ-கை.)

தேகாதிப்பிரபஞ்சமெல்லாம் பொய்யென்றும் பிறவி துன்பமீதா காதென்றும் ஞானிகளும் ஞானிகளல்லாருங் கூறுகின்ற ரிவருண் ஞானிகளை யறிவதெங்ஙனமெனின், வாசகஞானிகளையும் அநுபவஞானிகளையு மறிதற்கேது விததிருவெண்பாவிற் கூறுகின்றார்.

வேண்டாம் பிறப்பென்ற வார்த்தையினின் மெய்விடயந்
தீண்டா ததிலே தெரியாதோ - காண்பீ
ருடம்பு மிகையொன் றிலாமையே நோன்பென்
றடங்க வடங்கினு ளை.

(இ-ள்.) வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினில்" எ-து. பிரபஞ்ச மபொய்யென்றும் பிறவியாகாதென்றும் மெஞ்ஞானிகளும் பொய்ஞ் ஞானிகளுங் கூறிய வார்த்தையினுலவர்களைப் பிறித்துக்காணக்கூடா தாயினும்?

"உடம்பு மிகையொன் றிலாமையேநோன்பென் றடங்கவடங்கி னுளைமெய்விடயந் தீண்டாததிலேதெரியாதோ காண்பீர்" எ-து. உட

ம்மைச் சத்துருவென்று மோர் விடயங்களினும் பற்றிலாமையே நோன்பென்றுமறிந் தத்தேகபோகங்களை யானெனதெனறு கருதும் புறத்து நின்ற போதமடங்க வுண்ணின்ற போதமடக்கியமெய்ஞ்ஞானிகளையவர துடம்பு விடயங்களைப்பற்றாததனாற் றெரியுமாகலி னிக்குறிப்பாற்கண்டுகொள்வீர். எ-று.

பி-ம். மெய்யாற்காண்பீ ரென்றமையால், வார்த்தையிலே காணக்கூடாதாயினுமென்பது வருவிக்கப்பட்டது. மெய்யோடு இந்தியங்களொற்றுமையா யிருத்தலின் "மெய்விடயந்தீண்டாதென்று" ஆகுபெயரார்க்கூறினார். என்று என்பதனையுடம்புமிகை யென்றதனோடுங் கூட்டுக. (௰௩)

ஆறாவது - விரத்திவிளக்கம்

முற்றிற்று.



ஆகு திருவெண்பா-ருசுசு.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

# துறவு.

(அஃதாவது,) எத்தனை யுட்டுறவுடையாராயினும் புறப்பற்றொ ன்றிருப்பி னிப்பற்றேயோர் காலை யறிவை மயக்குமாகலிற் புறத்துறவும் வேண்டுமென் றிதனுட் புறத்துற விலக்கணங் கூறினாராகலி னிவ்வதி காரத்திற்குத் துறவென்று பெயராயிற்று.

(கவி-க-அ-கை.)

இளமைக்கண்ணே வனிதாதிபோகங்களைத் துறந்து ஞானாசாரியனை யடைந்து வீடடையவேண்டுமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

தேடப் படும்பொருளைச் சிக்கனவா கப்புதைத்துக்
கோடிக் கொருநிமிடங் கொள்ளுகினுங் - கூடாத
வாணாளை வீண்கழிக்கு மானிடரைப் போன்மயக்கம
பூணார்போய் கண்டுதுறப் போர்.

(இ-ள்.) தேடப்படும்பொருளைச் சிக்கனவாகப்புதைத்துக் கோடிக் கொருநிமிடங்கொள்ளுகினுங்கூடாத வாணாளைவீண்கழிக்கும்" எ-து. தம்மாற்றேடப்பட்டதிரவியங்களையெல்லாஞ் சிலவழியாது பத்திரமாகச் சேமஞ்செய்து வைத்துக்கொண்டு தாமுடலைவிட்டுப்போங்காலை நிமிடகால மவ்வுடலிருக்கக் கோடிதிரவியத்துக்குப் பிறர்கையிலாயுள் வாங்கிக்கொள்ளுவோமெனினுங் கூடாத விவ்வுடலோ டுயிர்வாழ் நாளைத் தவத்திற்கழியா தவத்திற்கழிக்கும்?

"மானிடரைப் போன்மயக்கம் பூணார்போய் கண்டுதுறப் போர்" எ-து. பேதை மானிடரைப்போற் றேகாதிப்பிரபஞ்சங்களைமெய்யாக

க்கண் டிவற்றின் மயக்கம் பூணர்க ளிவற்றைப் பொய்யாகக்கண்டுது றப்போர். எ-று.

ப-ம். கடவுளராயினு மங்ஙன மாயுட் கொடுக்கவுங் கொள்ளவுங்கூ டாதாகலிற், கூடாதவென்றார். (க)

(கலி-உ-அ-கை.)

மனைவியாதிகுடும்பம் வினைக்கீடாய் வந்ததன்றித் தமக்குறவன்றென்பது மனித்தியமென்பது மித்திருவெண்பாவிற்கூறுகின்றார்.

ஊர்க்குருவி யும்வளர்த்தகுஞ்சு மொருமனையிற்
பாக்கனையும் பார்த்திதுநம் பற்றென்னே - மூர்க்க
ரரிபிரம ரிந்திரர்கள் வாழ்வனித்த நம்வாழ்
வொருபொருளோ வென்றொழிவா ரோ.

(இ-ள்.) ஊர்க்குருவியும் வளர்த்தகுஞ்சுமொருமனையிற் பாக்கனையு ம்பார்த்திதுநம்பற்றென்னே மூர்க்கர்" எ-து. ஓர்மனையில் வாழாநின்ற ஊர்க்குருவியு மதுவளர்த்த குஞ்சுகளு மம்மனையிற் பூனையு மப்பூனையினது குட்டிகளு மிளமையி னல்வினைக்கீடாய்த் தம்மு ளுறவாய்க் கூடியிருந்ததையு முதிர்ந்தபோது தீவினைக்கீடா யுறவாயிருந்த தாமே தம்முட்பகையாய்ப் பிரிந்துபோனதையு மம்மனையு ளிருந்து நாம் பார்த்திருந்து மங்ஙனம் வினைக் கீடாய்வரு மனைவி மக்கண்முதலியவிப்பிரபஞ்சத்தினைத் துறவா திதனமேன் மனதுபற்றியிருத்த லிதென்னைகொலோ? ஆயி னவற்றைப்பார்த்திருந்து மெல்லோரு மில்வாழ்க்கையோடி மிருக்கவில்லையோ நீ ரிங்ஙனங்கூறிய தென்னையெனின்? அம் மனைவிமக்கண் முதலிய விப்பிரபஞ்சம் வினைக்கீடாய் வந்ததென்றறியா தப்பிரபஞ்சத்தோடுங் கூடி வாழ்பவர் மூர்க்கர்?

"அரிபிரம ரிந்திரர்கள் வாழ்வனித்த நம்வாழ் வொருபொருளோ வென்றொழிவாரோ" எ-து. அப்பிரபஞ்ச மிருவினைக்கீடாய் வந்ததென்றறிந்தவுத்தமராயினு ரியாவர்க்கு மேலாய வரிபிரம ரிந்திரர்முதலிய தேவர்கள்வாழ்வு மனித்தியமென்று வேதாகமங்கள்கூறுதலா னமதற்பவாழ் விதோர் பொருளோவென்று கருதி யப்பிரபஞ்சத்தைத்துறவா தொழிவாரோ. எ-று.

க-து. ஒருவனல்வினை யநுபவிக்குங்காலத்துத் தாய்தந்தை மனைவி மக்கள் சுற்றம்நட்பினர் முதலியோ ருறவாயிருந்திதஞ்செய்வர். அவன் தீவினை யநுபவிக்குங்காலத் தங்ஙன முறவாயிருந்தவர்தாமே பகையாயகிதஞ்செய்வாராகலி னிவ ரிருவினைக் கீடாய்வந்தவரொன் றறிந்து துறக்குர்பாடிக் கனைவகளை புவமை கூறினார். (ஙஉ)

(கலி-ரு-அ-கை.)

இங்ஙன மெல்லாமவற்றையுந் துறந்தவரியாவனெனின், செல்வமி ளமை யழகு முதலானவற்றுட் சிறந்திருந்து மவற்றின்பற் றொரணு வளவு மின்றி யவற்றை யெல்லாந் துன்பமென்று துரிசறக் கைவிட்ட பட்டினத்துப் பிள்ளைநாயனார் பத்திரகிரிநாயனார் போன்று? துறந்தோரே யெல்லாவற்றையுந் துறந்தோராவ ரென்பதும்? அச்செல்வ முதலியவற்று ளொன்றேனு மின்றாகவுந் துன்பந் தருதற்கிடமாகியம னைவியாதி குடும்பத்தை யின்பமெனக்கருதிக் கைவிடற் கஞ்சுவாரே ஆணவத்தான் மறைப்புண்டவராவ ரென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பட்டினத்துப் பிள்ளையினைப் பத்திரகிரி யைப்பாவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர் - வெட்ட
வெறுவெலும்பை நாய்கறண்ட வேந்தர்வர நாய்பார்த்
துறுமுவதைக் காட்டுவோ மோ.

(இ-ள்.) பட்டினத்துப் பிள்ளையினைப் பத்திரகிரியைப்பாவி விட்டுவிடமாட்டார்வெறுவீடர்" எ-து. அளவற்ற செல்வராயிருந்து மச்செல்வங்களெல்லாந் துரிசறத்துறந்த பட்டினத்துப்பிள்ளை நாயனாரையும் பத்திரகிரிநாயனாரையுந் தோத்திரம்பண்ணி மனைவியாதிய பற்றுக்களைவிட்டுத்துறக்கமாட்டார்கள். மிகுந்தமடியரா யிருந்தாராயினு மனைவி மக்கண் முதலாயினோரையாம் விடுத்துத் துறந்தோமேலவரை யயலார் கைக்கொண்டுபோவாரோவெனின்?

"வெட்டவெறுவெலும்பை நாய்கறண்டவேந்தர்வர நாய்பார்த்துறுமுவதைக்காட்டுவோமோ" எ-து. ஊன்சிறிது மின்றிய வெள்ளெலும்பை யோர்நாய் தனது பற்கொடுகறண்ட வந்நாய் முன்ன ரரையரெதிர்வர வந்நாயவ்வெலும்பை யவர்கவர்ந்து கொள்வரென்றுகருதியவரைப்பார்த் துறுமுவதைப்போ லியாமுங்காட்டுவோமோ. எ-று.

ப-ம். அளகேசனைப்போன்ற செல்வத்தினையு மருந்ததிபோன்றகற்பினையுடைய மனைவியையுங் காமனைப்போலுங் கட்டழகினையுந் துறந்தோர் பட்டினத்துப்பிள்ளை நாயனாரும் பத்திரகிரி நாயனாரு மாகவினவரைத்துறந்தோரென் றெடுத்துக்காட்டி யம்மூவகையு ளொன்றேனுமில்லாரு மவரைப்போற்றுறக்கமாட்டாமையால், "விட்டுவிடமாட்டார்வெறுவீடர்" என்றார்.

"ஏலும்புகறண்டு நாய்க்குத் தனதெயிற்றி லதுதைத்த துன்பந் தெரியா இன்பமாத் தோற்றல்போல வனிதாதிபோகங்களாகிய துன்பத்தை யாணவ மின்பம்போன் மாறுபடுத்திக்காட்ட வின்பமாகக்கருதலான், "வெறுவெலும்பை நாய்கறண்ட" வென்றார். தான்பற்றியவெலும்பை யனையர் கவர்வரொனக்கருதி யவரைப்பார்த் துறுமுவதுபோற் றாம்பற்றிய குடும்பத்தைப் பிறர்கவர்வரொனக்கருதிக்கூறலானு "முறுமுவதைக்காட்டுவோமோ, வென்றார். (௩)

(கலி-௯-அ-கை.)

நீ ரிங்ஙனங்கூறியவாறே துறந்தோர் பிறப்புநீங்குவரோவெனின், போகவாதனைக ளெல்லாம்பற்றறத்துறந்தோர் தேகவாதனை யாதிகளற்று ஞானத்தால்விடடைவது மெய்ம்மையாகலி னவர்க்கினி யென்றும் பிறப்பின்றென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கண்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள் - கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் துடக்கிதனை யிப்போ
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்.

(இ-ள்.) நாடுநகர் வீடுடையாடாய்தந்தை நட்புமக்கண் மாடுகுலம் பொன்னுடம்பின்வாதனைகள்" எ-து. நாடும்நகரும் வீடுமனைவியுந் தாயுந் தந்தையும் நட்பு மக்களு மாடுஞ் சாதியுந் திரவியமு மிவைமுதலிய வுடம்பு வாதனைகளும்?

"கூடத் தொடுத்தவலைக் கண்ணித்துடக்கிதனையிப்போவிடப்பெறுவாரேன்பிறப்பார்மேல்" எ-து. தாமகப்படப் பிணித்தவலையும் கண்ணியுமாகிய தொந்தனையென்றறிந் தித்தொந்தனை யிப்போதுவிடப்பெறுவா ரினிமே லேன்பிறப்பார். எ.று.

ப-ம். உடம்பின் வாதனைக ளென்றமையா லாடையாபரண மியானை குதிரை கவிகை சிவிகை சாமரை முதலியவுங்கொள்க. இங்ஙனங்கூறிய வெனதென்னும் போகப்பற்றை நீத்துத் தவஞ்செய்வோர்க்கியானென்னுந்தேகப்பற்றுமறும். இத்தேகப்பற்றறவே யிவற்றை யானெனதென்று புறத்துநின்ற பேதமறும். இப்பேதமறவே 'வுண்ணின்ற. போத மசுத்தவாசனைபண்ணாது சுத்த வாசனைபண்ணு மிவ்வாசனையான் ஞானங்கிடைக்கு மிஞ்ஞானத்தால் விடுளவாமாகலின் "ஏன் பிறப்பார்மே"லென்றார். (௪)

(கவி-௫-அ-கை.)

நீர்கூறிய மனையாதிய பற்றுக்களையெல்லாந் துறந்து பொன்னை மாத்திரம்பிடித்துக்கொண்டுதவஞ்செய்ப லாகாதோவெனின், பொன் மனத்தானினைப்பினு மாலன்றி மபக்கந்தருதலானும், நாட்டலாதியால் விழைவு வெகுளியாதிகளடுத்துத் தவப்பய னன்றி யிலறப்பயனுமழி தலானும், பெண்ணாசையினும் பெரும்பாவந் தருவதாகலினதனைப் ப ற்றலாகாதென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

தின்னிற் றிமிரில் விடம்பிடித்துத் தீர்க்குவிடும்
பொன்னை நினைக்கப் பொறாதுகாண் - பின்னை
மருந்தாலு மந்திரத்தி னாலுந் தவிராப்
பெரும்பாவம் பெண்ணிற் பெரிது.

(இ-ள்.) தின்னிற்றிமிரில விடம்பிடித்துத் தீர்க்குவிடும் பொன்னைநி னைக்கப்பொறாதுகாண் பின்னை மருந்தாலு மந்திரத்தி னாலுந் தவிராப் பெரும்பாவம்" எ-து. கோபாதிசளாகிய திமிரால் விடமுண்டா லவ் விடஞ் சிறிதுபோது தாழ்ந்து தலைமீக்கொண்டு பின்னர் மணிமந்திர வவிழ்தங்களாற் றீர்ந்துபோம பொன்னைக் கரத்தானும் பற்றாது வா க்கானுங்கூறாது மனத்தா னினைக்கவே யப்பொன்னாசை யாகிய விட மளைக்கணமேனுந் தாழா தந்நினைவினும விரைந்து தலைமீக்கொண்டு பின்னர் மணியானு மருந்தானு மந்திரத்தானுந் தீராத பெரும்பாவமா கலின்?

"பெண்ணிற்பெரிது" எ-து. நீவிடுகின்றேனென்ற பெண்ணாசை விடத்தைப்பெற்றவிப் பொன்னாசைவிட மிகவும்பெரி திதனைமனத்தா னும் நினையாது விடவேண்டும். எ-று.

ப-ம. துறந்தோர்பொன்பிடித்தா லதனைப்பாதுகாத்தற் கிடம்பிடிக் கவேண்டு மஃதன்றி யப்பொன்னை வளர்த்தற் கவரத்தோன்றிஅபக்கு வர்க்கு ஞானசாத்திரங்களைக் கூறிப் பொன்கொடுத்தார்மேல் விழை வுங் கொடாதாாமேல் வெகுளியுந் தோன்றுமிவைதோன் றவேதுறவா ன்வருந் தவப்பயனுமின்றி முன் பெண்ணோடுங் கூடிச்செய்த வில்லற ப்பயனு மின்றிக் கேடுவரு மாகலிற் "பெருமபாவம் பெண்ணிற்பெரி" தென்றார். (௫)

(கவி-௬-அ-கை.)

இங்ஙனந் தேகாதிப்பிரபஞ்சமெல்லாம் பொய்யென்று நீர்சொல லக்கேட்டதே யன்றி மற்றியாவருஞ்சொல்லக்கேட்டிலேனென்றமா

ளுக்கினை நோக்கி, உடம்புமுதலிய பிரபஞ்சந் தோன்றியழிவது பிரத்தியக்கமாகவிருத்தலிற் கானற் சலமபோ னழிவதென்று ஒருவர் கூறக் கேட்கவேண்டுவதின்றென்பதூஉம், இங்ஙனம்பிரத்தியக்கமாயிருப்பினு மறியா ரஞ்ஞானிகளென்பதூஉம், சுட்டறிவுபோயப் பிரபஞ்சத்தை யநித்தியமென்றறிந்து விரைந்துவிட்டுத் துறப்பதேஞானமென்பதூஉம் இத்துறவுடையோ ரீண்டுமீண்டும் பிறவா ரென்பதூஉந் தவக்குறைவான் மீண்டாராயினுமொன்றினும் பற்றுதலற் றிருப்பரென்பதூஉமிததிருவெண்பாவிற் கூறுகின்றார்.

செலவ மிளமை யுட மபுபெயத் தேன்றெறு
சொல்லுவதென் காணுரோ சுட்டதுபோ - லொலலை
விடுவோர் பிறபபிறப்பின் மீளார்கண் மீண்டாற
றெடுபோ சிவனைத் தொடா.

(இ-ள்.) செலவ மிளமை யுடமபுபெயத் தேதொன்று சொலலுவதென்காணுரோ" எ-து. செலவமு மிளமையு முடமபு மிவை முதலியபிரபஞ்சங்களுங் கானற் சலமபோலப பொய்யென றியாங் கூறவேண்டுவதென்னை, யவைமெய்போறறேன்றியழிவனவற்றைத் தாங்காட்சி பபிரமாணமாகக் காணாரெொலலோ? ஆயினெலலோரும் ஞானத்தாற்பிறப்பறுமென்று கூற நீர துறவாற பிறபபறுமென்று கூறியதென்னையெனின்?

"சுட்டதுபோயொலலை விடுவோர் பிறப்பிறப்பின் மீளார்கண மீண்டாற் றெடுமோசிவனைத்தொடா" எ-து. தேகாதிப்பிரபஞ்சங்களை யெனதியானென்று சுட்டி யறியு மிச்சுட்டுப் போதம்போ யபபிரபஞ்சத்தைச் சீக்கிரத்திலவிட்டுத் துறபபோர் பிறப்பிறப்பின்மீண்டு வாரார்கள். ஞானக்குறைவினுன் மீண்டார்களேனு முற்றுறந்து தவம்பணணிய வாசனைபா லப்பிற்றுக்களைக்கடந்து நிற்பரோயன்றி யவவாப் பற்றுந் தீண்டுமோ. தீண்டாதாயினும் பிறப்பின் மீண்டோரைத் தீணடாதோவெனி னவர் சிவனைப்போலு மொன்றேடும் பற்றற்றுடையாராகலிற் றீண்டாது. எ-று.

ப-ம். அநித்திய விவேகந்தோன்றிய வக்கணமே தாழ்த்திரா தெல்லாவற்றையும் விடவேண்டுமாகலி "னொல்லைவிடுமோ" வென்றார். முற்பிறப்பி லவாவுடையார்க் கிபபிறப்பினு மதுதொடாதல்போலமுற்பிறப்பி லவாவறுதியுடையார்க் கிப்பிறப்பினு மவ் வவாவறுதியே தோற்றுமாகலிற் "சிவனைத்தொடா" வென்றார். (௯)

(கலி-எ-அ-கை.)

இந்த வவாவறுதியினல் வரப்பட்ட வின்ப மென்னேயென்ற மாணாக்கனேநோக்கி, அவாவினு லற்பவின்பம் பெறுதல்போ லவாவறுதியாற் பேரின்பம் வருமென்பதும், அவாவினாற் நமக்கு நேரிடு மநர்த்தத்தை யுண்மையாய் விசாரித்தறியி னவ் வவாவறுதி வருமென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

ஆசையினு லற்பசுக மாயழிந்தாற் பேரின்ப
மாசையின்போக் கென்றறிய லாகாதோ - வாசை
நளிகைக் கழுக்குவந்த நாசமென நாடித்
தெளியப்போ மற்றிவையைந் தும்.

(இ-ள்) ஆசையினுலற்பசுகமாயழிந்தாற் பேரின்ப மாசையின்போக்கென்றறியலாகாதோ" எ-து. ஆசையினுலே போதஞ் சகமுகமாய்ச்சென்று விடயங்களிலழுந்தத் தமக் கவற்று ளற்பமாய சுகந்தோன்றியழியுமாறு லிவ்வாசை நாசமே சிவத்திற்றேன்றும் பேரின்பம் பெறுதற் கேதுவென் றறியலாகாதோ? வாயி னவ்வாசைபோமா றெங்ஙனமெனின்?

"ஆசை நளிகைக்கழுக்குவந்த நாசமெனநாடித் தெளியப்போ மற்றிவையைந்தும்" எ-து. அவ்வாசை போதத்தின்கண் ணேறுவது நெய்யாதி வார்த்தடைக்கு மூங்கிற்குழாய்க் கழுக்குவந்த நாசம்போலத் தமக்கு நாசமாமென விசாரித்தறிய வவ்வாசையின் பேரதமாய விடயங்களிற் பிரிந்துசெல்லு மிவ்வைந்தவாவு நீங்கும். எ-று.

ப-ம். ஆன்மா வாசையினல் விடயத்திலழுந்திச் சிற்றின்பம் பெறுதல்போ லவ்வாசைநாசத்தாற் சிவத்திலழுந்திப் பேரின்பம்பெறுமாகலிற் "பேரின்பமாசையின் போக்கென் றறியலாகாதோ" வென்றார்.

தே னெய் யெண்ணெயாதிவார்க்கு மூங்கிற்குழாய்ச் சிறுதுவாரத்தின்கண் மரவட்டைமுதலிய நுழைந்தா லதிற் சுழல்வதேயன்றி யழுக்கினின் மீளமாட்டா தாகலின்? முற்போற்றேனுதிவார்த் தங்கீகரியா ததனைப்புறம்பாய் விடப்படும அதுபோ லாசை போதத்தினேறி மிகுந்தபோ தெவ்விதத்தாலுமீளா ததனுலப்போதத்தில் வீட்டின்பத்திற்கேதுவாய் துறவு மெய்யுணர்வுமுதலிய நற்குணங்களேரு நிக்குணங்க. ளேருமையின் முன்போற் பிறவி ÷ துன்பத்தையே பெறமாக்கி யிங்ஙன மூவனைகூறினு.

(கவி-௬-அ-கை.)

இவ்வண் கிராகையோடிருந்தோர்க்குத் தற்போத மறுமோவென்ற மாணாக்கனை நோக்கி, கிராகையுடையோரை வஷிந்து விடயங்க ளடுக்கினும் போத மசையாதாகலி னிராகைவழிற் போதவொழிவு தானே வருமென்பது மிங்ஙனிருத்தல் பக்குவர்க்கரிதென்பது மங்ஙனமாயினு மவர்க்கு முபாயத்தா னவாவறுதிவருமாயி னப்போதச்சேட்டையளவிட் டெறியப்படுமென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

ஊமைமணி யாட்டுகினு மோசையழிந் தாற்போல
வாமதுபோ னிற்க வரிதுகா - ணூமாய்
வளர்ந்த வசத்தையெலா மாளமரக் காலா
லளந்தெறிந்து போட்டதுபோ லாம்.

(இ-ள்.) ஊமைமணியாட்டுகினு மோசையழிந்தாற்போல வாம்" எ-து. நாவிழந்தமணியைப் பிடித்தசைப்பினு மோசையொழிந்துநின்றாற்போலப் பஞ்சவிடயங்களும் வலியவந்தடுப்பினு மதிதீவிரபக்குவர்க்குப் போதங்கலங்காது கிராகையே யுண்டாம்?

"அதுபோனிற்க வரிதுகாணூமாய் வளர்ந்தவசத்தையெலா மாளமரக்காலா லளந்தெறிந்துபோட்டதுபோலாம்" எ-து. அவரங்ஙனநிற்கு மதுபோனிற்க மற்றைபபக்குவர்க்கு மிகவுமரிதுகாண். நானுவுபாயத்தானு மங்ஙன் நிற்கவருமாயி னுசையான் முன்னர்ப்போத மேலிட்டு மேன்மேல்வளர்ந்த வதனதுசேட்டையெல்லா மிறந்து போம்படி யறிவாகிய மரக்காலா லிவ்வளவென்றளந்து புறம்பாயெறிந்து போட்டதுபோலாம்-எ-று.

க-து. கிராகையோடிருப்போரைக் கருவிகள் சேட்டியாது நீங்குமக்கருவிக ணீங்கவே திருவருடோன்று மத்திருவருளாற் போதத்தையிதென் றளவிட்டறிந் தொழிக்கலாமாகலி னிங்ஙன்மூவமைக்கூறினார்.

(கவி-ங-அ-கை.)

தனுகரணபுவனபோகங்களிற் சிறிதேனும பற்றின்றி நிற்றற்குபாயமெங்ஙனமென்ற மாணாக்கனைநோக்கி, புவனபோகங்களைத் தானென்றெ னுள்ளபடியறிந்து கண்டு அவற்றின்கட் சார்ந்துநின்ற போதச்சார்புகெட் டருட்சார்பினின்றாற் புவனபோகப்பற் றறுமென்பது

ம், தநுகரணங்களைத் தனக் கன்னியமென் றறிந்தவற்றோடுக் தாக்கற் றுத் தனக்கன்னியமான வருளாய்நிற்பி னத்தநுகரணப்பற் றறுமென்ப தும், இங்ஙனமறவே மற்றை தத்துவங்க டாமே யறுமென்பது மித்தி ருவெண்பாவிற் கூறுகின்றார்.

> தனுவாதி நான்கினுக்குஞ் சார்வழிந்து சற்று
> நினையா தினைப்பாறி நின்றான் - மனையாமோ
> காந்தக் கடத்தூசி காற்றற்ற தீபமென
> வாந்தத் துவங்களய லாம்.

(இ-ள்.) தநுவாதிநான்கினுக்குஞ் சார்வழிந்துசற்று நினையாதினைப் பாறிநின்றான் மனையாமோ" எ-து. போகமு நானல்ல புவனமு நான ல்ல தநுவுநானல்ல கரணமு நானல்லவென் றுள்ளபடியறிந்து நியதிக ளாற் தத்தநுவாதி நான்கினிடத்து மியானெனதென்று சார்த்துகின்ற போதச்சார்வுகெட் டவற்றை மீட்டுஞ் சற்றும்பற்றாதருளி லினைப்பா றி யசைவறநின்றான் மனையாகிய புவனத்திடத்து மம்மனையைப் பற்றி யிருந்த வனிதாதிபோகத்திடத்து முன்போற் பற்றுண்டாமோ? ஆயிற் புவனபோகங்களிற் பற்றின்றி நிற்பினுந் தநுகரணங்களிற் பற்றின்றிநி ற்ப தெங்ஙனமெனின்?

"காந்தக்கடத்தூசி காற்றற்றதீபமென வாந்தத்துவங்க ளயலா ம்" எ-து. காந்தக்கடத்திற் கெதிர்முகமாயபோது பற்றியு மதனுட்கி டந்தபோது பற்றாதுமிருந்த காந்தக்கடத் தூசிபோலுங் காற்றிலிருந்த போதசைந்துங் காற்றின்றியபோ தசையாதுமிருந்த காற்றற்றதீபம் போலு மத்தநுகரணங்களைத் தனக்கன்னியமாய்க்கண்டு நீங்கிநிற்பி ல வற்றோடுக் தாக்கற்றுநிற்பதுண்டா மவற்றோடுக் தாக்கற்றுநிற்கவே ம ற்றையதத்துவங்களு மயலாய்நீங்கும். எ-று.

ப-ம். தனுவாதிகளினீ கறங்குபோற் சுழன்றதன்மை திருவருட்க ணின்றபோ தின்மையூ "லினைப்பாறி" யென்றார்.

காந்தக்கடத்திற்கெதிர்முகமாயபோது பற்றியவூசி யதனுட் கிட ந்தபோது பற்றாதிருந்ததுபோற் சகமுகமாய்நின்று தேகத்தையானெ ன்றுபற்றியபோத மகமுகமாய்நின்று திருவருளையடைந்தபோ தத்தே கத்தை யானென்று பற்றாதாகலிற் "காந்தக்கடத்தூசி" யென்று மப் புவனபோகத் தநுகரணங்களைப் போதம்பற்றாது நின்றபோது கரண ங் தற்சேட்டையற் றடங்கு மப்போது போதந் திருவருளோடுங் கூடி க் காற்றற்றதீபம்போலாகி மீட்டுங் கரணத்தோடுங் கூடாதாகலிற்

"காற்றற்றதிப" மென்றுங், கரணங்களறவே யக்கரணங்களினது சேட்டைக் கேதுவாய கலாதிகளு மக்கலாதிகளைப் பிரேரகம்பண்ணுஞ் சுத்த தத்துவங்களு நீங்குமாகலிற் "றத்துவங்களயலா" மென்றுங் கூறினா. (ம)

(கலி-மக-அ-கை.)

உத்தமராயினோர் கற்புடைய மனைவியைத் துறப்பரோவென்ற மாணுக்கனைநோக்கி, பெண்க ளின்பமிகச்சிறிதென்பது மதனால்வருந் துன்ப மிகப்பெரிதென்பது மவாகூட்டரவு மாயையென்பது மவர்கட் செய்யு மைம்புலநுகர்ச்சி பெருங்கேடடைத் தருமென்பது மிங்ஙனம றிந்தோர் தமமனைவி யருந்ததிக் கற்பினளாயினுந் துறப்பரென்பது மி த்திருவெணபாவிற் கூறுகின்றார்.

நாயலகை நெய்விருமபி நக்குவது நஞ்சிட்ட
பாயசமு மெய்ப்பரிசப் பாவைமிகச் - சாயாநீர்
வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டிவையின்
சாட்சியைக்கண் டார்துறவா தார்.

(இ-ள்.) நாயலகைநெய்விருமபி நக்குவதுநஞ்சிட்ட பாயசமுமெய்ப் பரிசப் பாவைமிகச் சாயாநீர்வேட்கை,, எ-து. நாயானது வாள்வாயி ற்றட்விய நெய்விரும்பி யவ்வாள்வாயை நக்குவதுபோலும், விடங்கல ந்த பாயசத்தை யொருவன் சுவையென விரும்புவதுபோலு மாகும் பாவையரது மெய்ப்பரிசத்தை யின்பமாய்விரும்புத லாகலினும்பொ ய்யாகிய வப்பாவையரது மெய்ப்பரிசதநை மெய்யாகக்கண் டநுபவிக் க விழைதன் மிகவும பொய்யாகிய கானனீரை மெய்யாகக்கண்டு தா கத்திற்குண்ண விருமபுதலபோலா மாகலினும் ?

"அசுணமிபம்விட்டின் மீன்வண்டிவையின் சாட்சியைக்கண் டா ர்துறவாதார்" எ-து. அசுணப்புட் சத்தத்தானு மியானை பரிசத்தானு ம் விட்டிற்பூச்சி யுருவத்தானு மீ னிரதத்தானும் வண்டுகந்தத்தானுங் கெடுமென விவைகளைச் சாட்சியாகக் கண்டுறலானு மிவ்வைந்துவிட யங்களு முளவாகிய வப்பாவையரைத் துறவாதா ரியாவர். எ-று.

க-து. வாள்வாயி னெய்யை நக்கினநாய்க்கு நஞ்சிட்ட பாயசமு ண்டோனுக்கு முன்னாறுவள வின்பம்போற் றோன்றிப் பின்னாதனு ன் மிகவுளவு துன்பம் வருவதுபோ லநுபவிக்கும்போது சிறிதின்பம் போற்றோன்றிப் பின்னைத் துன்பம்வருமென்பதூம், பொய்யாய்த்தோ

ன்றுங் காணவினை மெய்யாக்கருதி யுண்ணத் தொடங்கினோனைப்போ ற் பொய்யாய்த்தோன்றும் பாவையனை மெய்யாக்கருதி யநுபவிக்கத் தொடங்குவதென்பது மோரோர்விடயத்தைவிழைந் தொவ்வொன்று கெடுமெனி லைந்துவிடயங்களு முளவாகியபாவையனைவிழைந்தா லவ ரால்வருங் கேட்டிற் களவின்றென்பது மிதனாற்கொண்க. (௰க)

(கவி-௰உ-அ-கை.)

எல்லோரு மனைவியாதிய குடும்பத்தோடிருந் தின்பங்களை யநுப வித்துக்கொண்டு பூரிப்போடு மிருக்க வக்குடும்பத்தை நீர் துன்பமெ ன்றீரிதென்னையெனின், உத்தமபக்குவராயினோர் குடும்பத்தோடுங்கூ டியிரானென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

இடும்பைக்கே கொள்கலமா யேழ்நரகுக் கீடாங்
குடும்பத்தைக் குற்ற மறைக்கி - னடுங்காரோ
வைவர்க் கொருவ னறுதொழிலைச் செய்தலான்
மெய்யைப் பொய்யாக்கி விடும்.

(இ-ள்.) இடும்பைக்கே கொள்கலமா யேழ்நரகுக்கீடாங் குடும்பத் தைக் குற்றமறைக்கி னடுங்காரோ,, எ-து. அஞ்ஞானிகள் இம்மைக்க ண்ணே துன்பங்களையெல்லாந் தாமநுபவித்தற் கேற்றுக்கொள்வீதாய கப்பலாய் மறுமைக்கண்ணே யெழுவகைப்பிறவியாகிய வெழுவகை ந ரகத்தையுமுண்டாக்குங் கனதையினையுடைய மனை சுதர்முதலிய கு டும்பத்தை இங்ஙன மிகபரங்களினுந் துககத்தைத்தருவதென் றறியா ர். இங்ஙனமறியவொட்டா தாணவமாகிய குற்ற மவரைமறைத்தலாலி வ்வாணவக் குற்றய்நீங்கினோர் குடும்பக்குழாத்தைக் கண்டாலு முள ம்வெருவி நடுக்கமுறார்கொலோ? ஆயினீர் மெய்யென்றுகூறிய சிவ மொருவர்க்குந் தோன்றா திருப்பானே னென்னில்?

"ஐவர்க்கொருவனறு தொழிலைச்செய்தலான் மெய்யைப்பொய் யாக்கிவிடும்" எ-து. ஐந்திந்தியங்கட்கு மோர்முதல்வனாகிய வான்மாவ வ்விந்தியங்களா லறிந்தநுபவிக்கும் விடய சுகத்தின்பொருட் டுழவுமு தலிய வறுவகைத்தொழில்களின் முயற்சிப்படலா னிம்முயற்சியச் சி வத்தைத்தெரியவொட்டாது பொய்யாக்கிவிடு மிதனையறிதி. எ-று.

ப-ம். குடும்பத்தா லிம்மைகட் டேக துக்க மனோதுக்கங்களிடை யிறாது வருதலி "னிடும்பைக்கேகொள்கலமா" யென்று, மிக்குடும்ப

வாசனையான் மறுமைக்கட்பிறவிக டொன்றுதொட்டு வருமாகலின்"னே ழ்நரகுக்கீடா" மென்றுங்கூறினார்.

அறுதொழிலைச்செய்தலான் மெய்யைப்பொய்யாக்கிவிடு மெனவே, குடும்பத்தின்பொருட்டுச்செய்யு மறுவகைத் தொழில்களின் முயற்சியைவிட்டுச் சிவயோகமுயற்சியிற்றொடங்கின் மெய்ப்பொருடோற்றுமென்பதாயிற்று.

அறுவகைத்தொழில்களாவன, உழவு-தொழில்-வாணிகம்-எழுத்து-சிற்பம்-பரதம்- இவை யாறுமெனக்கொள்க. (௰௨)

(கவி-௰௩-அ-கை.)

மனைவியாதிய குடும்பத் துன்பங்கட்கும் பிறவி வாதனைகட்கு முறைவிடமென்பதும், இதனை யிங்ஙனமென் றுணவமறைப்பா னஞ்ஞானிக ளறிந்திலரென்பதும், ஞானிக ளிதனைக்காணினுங் கேட்கினு நடுங்குவரென்பது மிக்குடும்பமுயற்சி சிவத்தையறியவொட்டாது மறைக்குமென்பதும், உத்தமபக்குவர்விடாது சூழ்ந்துவாதிக்கு மிக்குடும்பவாதனையான்வரு நட்டங்களை முற்றுமறிந்தநனையக்கணத்தே விடுவரென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

குரங்குத் துனிசிக் குடும்பக் குழாமும்
பெருங்குப்பை யிற்கரடிப் பெண்டும் - பொருந்துவரோ
காலனுந் தியுங் கடலுமிருங் கல்லுமாய்
மேலு நரகாய் விடும்.

(இ-ள்.) குரங்குத்துனிசிக்குடும்பக்குழாமும் பெருங்குப்பையிற் கரடிப்பெண்டும் பொருந்துவரோ,, எ-து. ஓர்குரங்கைப் பலகுரங்குவந்து சேட்டித்தல்போலத் தாய்தந்தை சுதர் சுற்றமுதலியோர் தம்மை வந்து வாதிக்குங் குடும்பக்கூட்டத்தையு மக்குடும்பக் கூட்டமாகிய பெரியமலக்குப்பைக்கட் கரடிபோலும் பற்றப்பட்ட பெண்டாது கூட்டரவினையும் பொருந்தியிருப்பரோ? உத்தமராயினா ரெல்லோரு மவரோடுங் கூடியிருக்கவில்லையோ விவரென்னை யங்ஙன மிராதுபோவதெனின்?

"காலனுந்தியுங்கடலுமிருங்கல்லுமாய் மேலுநரகாய்விடும்" என்-து. அக்குடும்பக்கூட்டம் காலனைப்போலுந்தீயைப்போலுங் கடலைப்போலும் பெரியமலையைப்போலு மிம்மைக்கண்ணே துன்பத்துருவதாய்

மறுமைமக்கண்ணு மதனேடுங் கூடியிருந்தவாசனையாற் பிறப்பாகிய ந ரகத்தையுந் தருவதாய் விடுமெனவுறிந் ததனேடுங்கூடியிரார். எ-று.

ப-ம். சோறுகூறை முதலியன கொடுக்கும்போதுங் கொடாத போதும் வரும் பிணக்கானு மவற்றிற்கேதுவாகிய திரவியந்தேடுதலா னு மதனைப் பாதுகாத்தலானு மவர்க்கு வியாதியாதி துன்பமபிமானப ங்கம் வந்தகாலையினு மவ ரிறந்தகாலையினு மிவை முதலியவற்றா லக் குடும்பத்தாற் றேகதுக்க மனேதுக்கங்க ளிடையறாதுவருதலிற் "கு ரங்குத்துனிசிக்குடும்பக்குழா" மென்றார்.

இத்துன்பக் குழுவிற் காடிபோலுங் குணத்தானுஞ் செய்கையா னு மிழிவாயபெண்டீரைக் கூடுவரோவென்பதனைப "பெருங்குப்பை யிற் காடிப் பெண்டுமபொருந்துவரோ" வென்று குறிப்பாற்கூறினர்.

காலனுயிர்களைப் பாசத்தாற் பிணித்துக்கொடுசென்று நிரையத் துள் வீழ்த்தி வருத்துதல்போற் றுறந்து செலகின்றேனென் றிரண்ட டிச் சென்றானை மனை சுதா முதலியோர் கரசரணங்களைப் பற்றிக் கொண்டோவிட டழுதவனுள மிளகபடணணி மீட்டுக்கொடுவந்து கு டும்பமாகிய துன்பததுளகப்படுத்தி வருத்துதலிற் "காலனுமென்று" மொருவனைத்தீச் சூழ்ந்துகொண்டதுபோற்சூழ்ந்துகோடலிற் "றீயெ ன்று" நடுக்கடலில வீழ்ந்தோனுக்குக் கரைகணடேறக்கூடாததுபோ லக் குடுமபசாகரத்தில் வீழ்ந்தோனுக் கிக்கரைகண்டேறக்கூடாதாக லிற் "கடலென்று" மலையிருத்திககொண்டதுபோற் குடும்பபாரந்தந்த லைச்சுமையாயிருத்துதலி "னிருங்கல்லென்று" மிறக்குமபோதுயிர்க் கெந்தவாசனையிருந்த தந்தவாசனையோடுஞ்சென்று பிறத்தலின் "பே யுரோக" மென்றுங்கூறினர். (௰௩)

(கவி-௰சு-அ-கை.)

இங்ஙனந் துன்பமென்றறிந்து துறந்துசெல்வோர் தம்மை[illegible] யிருந்த குடும்பத்தைப் பாதுகாத்தற்குச் சகோதரர் முத[illegible] னொருவரைத் துணையாகவைத்துப் பின் றுறந்து சேறலா[illegible]தோவெ னின், குல்முதலியவற்றி னபிமானமின்றி யநித்திய விவேக[illegible]

கவற்றோ டெண்ணுக்கூதலற்றுக் கூடியின் றந்தவிவேகம்வரி•னெ
வரோடும்விடைபெறாது சென்றவனே துறவிகளுட்சிறந்தவனென்றி
திருவெண்பாவிற் கூறுகின்றார்.

கன்னனைப்போற் றன்னை யறிவனோ காக்கையுடன்
மன்னு குயில்போன வாறுபோ - லன்னியமாய்ப்
பேசாது போன துறவி பிறப்பறுப்பார்க்
காசானு மென்றே யறி.

(இ-ள்.) கன்னனைப்போற்றன்னை யறிவனோகாக்கையுடன் மன்னுகு
யில்போனவாறுபோ லன்னியமாய்ப் பேசாதுபோனதுறவி,, எ-து.
இயா னின்னசாதி யின்னார்குலத் தாய்தந்தையின்னாரென்று தனதுகு
லக்குடும்பங்களை யறியாத கன்னனைப்போலு முத்தம பக்குவ னியா
னின்னசாதி யின்னார்குல மின்னார் தாய்தந்தையென்று தனது குலக்
குடும்பங்களைப்பகுத்தறிவனோ? இங்ஙன மொன்றையும் பகுத்தறியா
து காக்கையுடன் பருவம் வருமளவுந் தனதினம்போற் கூடிச்சென்று
பருவம் வந்தகாலை யதற் கன்னியமாய்ப் பேசாது சென்ற நிலைபெற்ற
குயில்போலு மனித்தியவிவேகம் வருமளவு மவரினம்போற் கூடியி
ருந் தந்த விவேகம் வந்தகாலை யவர்க்கன்னியமாய்ப்பிறிந் தவரோடுஞ்
சொல்லாதுசென்ற துறவியே மெய்த்துறவி?

"பிறப்பறுப்பார்க் காசானுமென்றே யறி" எ-து. அத்துறவி பிற
ப்பறுக்கும்பொருட்டுத் துறந்தார்க் காசாரியனுமாவன்-எ-று.

ப-ம். தருமன்முதலிய துணைவரையுங் குந்தியாகியதாயையுங் கண்
டிருந்துங் கன்ன னறியாததுபோ லிவன் குடும்பத்தாரைக் கண்டிருந்
து மனித்தியவிவேகத்தாற் பொய்யாய்க் கண்டானாகலிற் "கன்னனைப்
போற் றன்னையறிவனோ" வென்றும், குயில் காக்கையோடு கூடியிரு
ந்தபோதுந் தன்குரலைக் காட்டிற்றுக் கொத்துமென்றடங்கியிருந்து செ
ல்லும்போதுங் கூவாது சென்றதுபோற் குடும்பத்தோடு கூடியிருந்
தபோதுந் தான் றுறந்து சேறலை யவரோடுஞ் சொன்னாற் பற்றுவரெ
ன்று தறிந்து சொல்லா தடங்கியிருந்து செலலும்போதுஞ் சொல்லா
து சென்றமையாற் "குயில்போனவாறுபோற் பேசாதுபோனதுறவி"
யென்று கூறினார்.

அறிவுந் துறவுமுள்ள ஞானி சிறப்புணருகவினிவனை "யாசாரு" மென்றார்.

(கவி-ώரு-அ-கை.)

இங்ஙனந் துறந்துசெல்வாரை மாதாபிதாக்கள்வந்து தடுத்தாலெ ங்ஙனஞ் செல்வாரெனின், குடும்பபாரம் பொறுத்தறிகாற்றுது வருந் தி யிழித்துவிட்டு விரைந்துசெலவோர், தாய்தந்தைய ராதியர் தடுத் தற்குச் சிறிதுமுட்படாரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

நித்திரைசெய் வீட்டி னெருப்பும் பெரும்படையு
மூற்றிப் புறப்பட்டார் மூற்றததே - பித்தரைப்போ
னில்லென்று சொன்னாலு நிற்பரோ வப்படிகா
ணில்லறத்தை நீத்தா ரியல்பு.

(இ-ள்.) நித்திரைசெய்வீட்டி னெருப்பும்பெரும்படையு மூற்றிப்பு றப்பட்டார்மூற்றத்தே பித்தரைப்போ னில்லெனறுசொன்னாலுநிற்ப ரோ" எ-து. தாநித்திரைபண்ணுகின்றவீட்டினுள்ளே நெருப்பும்பெரும் படையுஞ் செறிந்துவர விழித் தவற்றைக்கண்டு வெருண் டவ்வீட்டின் வாயில்கடந்து முன்றிலிற் புறபபட்டார் தமக்கனுகூலராயினுமவற்றி னடிநிற்பீரென் றறியாது கூறினும் பித்தரைப்போலு மவர்மொழியை யுட்கொண்டு கணப்போதாயினு நிற்பரோ?

"அப்படிகா ணில்லறத்தைநீத்தாரியல்பு" எ-து. அவ ரெப்படிநில் லா தோடிச் செல்வரோ வப்படிகாண் மாதாபிதாக்கள் வந்து தடுப்பி னு நில்லா தில்வாழ்க்கையைத் துக்கமாகக்கண்டு துறந்து செல்வார து முறைமையும். எ-று.

க-து. குடும்பந் துக்கமென் றறியாதபோ ததனோடுங் கூடியிருப்பா ரென்பதுந் துக்கமென் றறிந்தபோ ததனைத்துறந்துசெல்வரென்பது ந் துறந்துசெல்லும்போ தியாவர் தடுப்பினு நில்லாரென்பது மிவ்வுவ மைக்குறிப்புகளாற் காண்க. (ώரு)

(கவி-ώசு-அ-கை.)

இங்ஙனந் துறந்து செலவாரியல் பின்னுங்கூறுகின்றார்.

கட்டு நெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போற் றங்குவிற்போ
வெட்டு களத்தின் வெருவினர்போன் - முட்டத்

தொடர்ந்த படைபிழைத்துத் தோன்றப்போ வார்போ
லடங்கத் துறந்தேகு வார்.

(இ-ள்.) கட்டுநெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போற்கங்குலிப்பேய் வெட்டுகளத்தின்வெருவினர்போன் முட்டத் தொடர்ந்தபடை பிழைத்துத் தோன்றப்போவார்போல்,, எ-து. பொருள்திருடிய கள்வனைச் சிலர் வந்து பற்றிப்பிணித்துவருத்த அவருளரு ளுளத்தொருவன்வந் தப்பிணியை யவிழ்த்துவிட்டகாலை விரைந்துசெல்லு மக்கள்வனைப்போலு மரையிரவிற் பெரும்பேயைக்கண்டு வெருவினர் விரைந்துசேறல்போலும், உயுத்தகளத்தின் வெருவினர் விரைந்து சேறல்போலுந் தம்மைப்பிடிக்கப்பின்றொடர்ந்த படைக்குத்தப்பி மிகவுங் கைகடந்து செல்வார்போலும் ?

"அடங்கத்துறந்தேகுவார்" எ-து. தாய் தந்தை மனை சுற்ற முதலிய குடும்பக்கூட்டங்களையெல்லா மொருங்கே துறந்துசெல்வா ரன்றி யவர்க்கோர் தடையுமின்று. எ-று.

க-து. மலபரிபாகம்வராமுன் றாஞ்செய்த விருவினைக் கீடாய்க்குடும்பபாசத்தாற் பிணிப்புண்டுவருந்துவரென்பதும், அப்பரிபாகம்வந்தகாலைத் தோன்றுகின்ற வருட்சத்தி யக்குடும்பபாசந் துக்கமென்றறிவிக்க வறிந்து துறந்து செல்வாரென்பது மப்போ திரவிற்றோன்றும் பேய்போலு முயுத்த களம்போலும், குடும்ப மவர்க்குத்தோற்றுமென்பது மக்குடும்பக் குழாங்கள் பின்றொடர்வரென் றறிந்து தூரதேசத்திற் செல்வாரென்பது மிவ்வுவமைக் குறிப்புகளாற்காண்க. (௰சு)

(கவி-௰எ-அ-கை.)

தாந்துறந்துபோதற்குக் குடும்பத்தாற் சம்மதித்தா லப்பதியிலிருந்து தவம்பண்ண லாகாதோவெனின், தேகாபிமானம்விடுத் ததனைப் பகையாகவு மெதிரிட் டவைகளைத் துன்பமாகவுங்கண் டனைத்தையுமிழந்து பூரணவருள்கொண்டோ ரிதுநா டிதுகாடென்று மிவருடுத்தாரிவரயலாரென்றும் பகுத்தறித லின்றாகவின், முன்னிருந்த பதியினிப்போ திருப்பதனு லவர்க்குவரும் பயனென்றுமின்றென்று மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

உடுக்கை மறந்தவருக் கூர்காடென் றுண்டோ
வுடுத்தயலா ருண்டோபே யானற் - சுடப்போட

டெதிரிட்ட தெல்லா மிழந்தார்க் கிருந்த
பதியைக்கொண் டுண்டோ பயன்.

(இ-ள்.) உடுக்கைமறந்தவருக் கூர்காடென்றுண்டோ வடுத்தயலாருண்டோபேயானல், எ-து. குடும்பக்கூட்டங்களையெல்லாந் துரிசறத்துறந்து தேகத்தையுஞ் சத்துருவாகக்கண் டந்தேகத்தி னுன்குமுழுஞ் சுற்று முடுக்கையு மறந்துதிரிவோர்க் கீதூரென்று மிதுகர்டென்றும் பகுத்துக்காணு நினைப்பு முண்டுகொல்லோ? அஃதன்றிப் பூரணப்பேய் வயமாகையிஞு லவர்க்கடுத்தாரு மயலாரு முண்டுகொல்லோ யிங்ஙனமுடுக்கை மறந்தடுத்தா ரயலாரென்பதுந் தோன்று திருப்பதுமன்றி.

"சுடப்போட்டெடதிரிட்டதெல்லா மிழந்தார்க்கிருந்த பதியைக் கொண்டுண்டோபயன்" எ-து. கரத்திலெடுத்தபொருண் மிகவுஞ்சுட விரைந்து போட்டுநின்றாற்போற் றமதறிவிற் கெதிரிட்ட கருவிகளை யெல்லாந் துன்பமாகக்கண்டு ஞானக்கினியினு லெரித் திவற்றையு மிழந்தார்க்குத் தாமுன்னிருந்தபதியி லிப்போதிருந்ததுகொண்டுபயனென்னை யுண்டுகொல. எ-று. (௰௭)

(கலி-௰அ-அ-கை)

முன்னிருந்த பதியைவிட்டு மற்றோர் சிவதலத்தி லோரிடம்பற்றியிருந் தொருவர் முன்னிலையா யுதராக்கினிக் கன்னமாத்திரம் வாங்கியுண்டு தவத்தைப்பண்ண லாகாதோவெனின், பிரபஞ்சங்களையெல்லா மானந்தமயமாகக்கண்ட துறவினர்க்குத் திசையாதியெவ்விடத்துஞ் சிவாலயமாகுமென்பதும், பிச்சையாதி யுளவாகலி னன்னபானுதியோரிடத்திற் குறியாரென்பதும், ஒருவரோடும்கூடா தேகாந்தமௌனத்திருப்பதே யவர்க்கிச்சையென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

துக்கஞ் சுகமான சுட்டறிவு கெட்டவர்க்குத்
திக்குண்டோ வெங்குஞ் சிவாலயமா - மக்கினிக்குப்
பிச்சை பொதுமிழுனீர் பேரிதுவே பேசார்தம்
மிச்சையிருப் பேகாந்தத் தே.

(இ-ள்.) துக்கஞ்சுகமான சுட்டறிவுகெட்டவர்க்குத் திக்குண்டோ வெங்குஞ் சிவாலயமாம்,, எ-து. முன்கண்ட பிரபஞ்சதுக்கமெல்லா மிப்போ தானந்தமாகக்கண் டச்சுட்டுப்போதங்கெட்டோர்க் கின்னதிசையென்று மின்னவிடமென்றும் பகுப்புண்டாமோ. அவர்க் கெத்திசையு மெவ்விடமுஞ் சிவாலயமேயாகு மஃதன்றி?

"அக்கினிக்குப்பிச்சைபொதுநிழனீர் பேரிதுவேபேசார்தம் மிச்சையிருப்பேகாந்தத்தே" எ-து. உதராக்கினி யவித்தற் கூரின்கட்பிச்சையு மிருத்தற்கிடம்பொதுச்சாவடி மரநிழலுந் தாகந்தணித்தற் கேரியாதிநீர்களு முளவாகலி னன்னமிட நீரொன்னு மிவற்றினதுபெயரையே சொல்லாராயி னவர்க்கிச்சைதானேதெனி னொருவரோடுங் கூடியிராது பேசா தேகாந்தித்திருப்பதே யிச்சையாம். எ-று.

ப-ம். இவுத்தையுணர்ந்தோர்க் கெங்கும் பரிபூரணமாய்த் தோற்றுமாகலின் "எங்குஞ் சிவாலயமாகு" மென்றார். (௰அ)

(கலி-௰கூ-அ-கை.)

ஒருவரோடு கூடியிருந்துபேசுதலு மாகாதோ வெனின், பிரபஞ்சிகள் ஒருவரோடொருவர் கூடலும் நானாவிதமாய் வார்த்தையாடலுமே யின்பமாய்க்கருதி மயங்குவரென்பதும், துறவோர் அங்ஙனஞ்செய்வது துன்பமென்று விடுப்பதுமன்றித் தம்முடலோடுங்கூடியுங் கூடாதிருப்பரென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அங்கக்கா ரன்றுதிப்பு நாவிசுவை யானதுவுஞ்
சிங்கி குளிர்ந்ததுவும் போற்செகத்தோர் - சங்கத்தைத்
தீண்டுமன மேபகையாய்ச் சேரா துடலோடே
மாண்டுதிரி வார்துறவா வார்.

(இ-ள்.) அங்கக்காரன்றுதிப்புநாவிசுவையானதுவுஞ் சிங்கிகுளிர்ந்ததுவும்போற் செகத்தோர்,, எ-து. நானாவேடங்கொண்டு நடிக்கும் வேடதாரி யவ்வேடங்கட் கேற்ற பாடை பேசுதல்போலவும், கொல்லாநின்ற வற்சநாபி யொருவர்க்குச் சுவையானதுபோலவுந் தன்காலிற் பூண்ட விலங் கொருவர்க்கிதமானதுபோலவும், தத்தஞ்சாதிகட்குந் தொழில்கட்கு மேற்ற சொற்களைச் சொல்லியுந் துன்பமாயுள்ள விடயங்களை யின்பமாகக்கருதிக்கொண்டு மனைவிமுதலிய பாசவிலங்கை யிதமாகக் கைக்கொண்டு மயங்கிச் சுழலாநிற்ப ரிச்செகத்தோர்?

"சங்கத்தைத்தீண்டுமனமேபகையாய்ச்சேராதுடலோடேமாண்டுதிரிவார்துறவாவார்" எ-து. இங்ஙனஞ் சுழலாநின்றார் கூட்டத்தைக் கூடவேண்டுமென்று கருது மனநினைவே தம்பகையாகியந்நினைவோடுங்கூடார் துடலோடுங் கூடியிருந்துங் கூடா தவ்வுடல்வாதனை மாண்டுதிரிவாரே துறவினையுடையா ராவரென்றறிதி. எ-று.

ப்-ம். "உடலோடேமாண்டு திரிவா" ரெனவே, போகவாதனை தேகவாதனை போதவாதனையாகிய விம்மூன்றுவாதனையுந் தீர்ந்தாரெ ன்பதாயிற்று. (௰௯)

(கவி-உ௰-அ-கை.)

ஞானிகட்கு மஞ்ஞானிகட்குந் தாரதம்மியமு மவரை யிவரெண் ணுமலழைப்பது மிங்ஙனமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பொன்மலைமே லாகாயம் போவார்க்குப் பூமியுள்ளோ
ரென்னவே நாதாந்த மெய்தினரை - யென்னருகே
வாவென்று பாற்கடலில் வாழரியை மண்டூகங்
கூவுந் தகைமையதொக் கும்.

(இ-ள்.) பொன்மலைமேலாகாயம்போவார்க்குப் பூமியுள்ளோ ரென்னவே,, எ-து. பொன்மலைமுடிமே லாகாச கமனம்பண்ணுவோர்க் கிந்நிலத்தின்கண் ணுள்ளார் மிகவுந் தாட்சியானதுபோன் ஞானிகட்கும் பிரபஞ்சிகட்கு முயர்ச்சி தாழ்ச்சி யிருப்பவும்?

"நாதாந்தமெய்தினரையென்னருகே வாவென்றுபாற்கடலில்வா ழரியைமண்டூகங் கூவுந்தகைமையதொக்கும்" எ-து. நாததத்துவத்தி ன் முடிவாயிருந்த திருவருளையடைந்த ஞானிகளைப் பஞ்சபூதகாரியந் தானாகிய தேகந் தானாகி யிந்தியவழி நுழைந்து செல்லும பிரபஞ்சி யொருவ னென்மனைக்கு நீர்வருகவென்றழைத்தல் பாற்கட னுப்பண ரவணையிற் பள்ளிகொள்ளாநின்ற பெருமாளைப்பார்த் தோர் தவளை நீ ரு மிக்கடன்மிசை மிதந்து துயில்கின்றீ ரியானு மிக்கடன்மிசைமிதந் து துயில்கின்றே னுமக்கு மரியென்றுபெய ரெனக்கு மரியென்ற பெ யராகலி னெனதருகே நீர்வருகவென் றழைக்கு முறைமையதொக் கும். எ-று.

பு-ம். பொன்மலைமுடியை நாதாந்தத்திற்கு மம்மலை முடிமேற் றோன்று மாகாயத்தை யிந்நாதாந்தத்திற் றோன்றுந் திருவருளுக்கு ம வ்வாகாயத்திற் கமனம்பண்ணுவோனை யித் திருவருளையுங்கடந்துசெ ல்லும் ஞானிகளறிவிற்கு முவமித்துக்கூறியவாறு காண்க.

ஞானிகள், தத்துவங்கட்கெல்லா முடிவாய் நின்ற பரிபூரணத் தையடைந்தவர். பிரபஞ்சிக டத்துவங்கட்கெல்லா மடியாயுள்ள பஞ்ச

பூத்காரியங் தானுயுள்ள தேகத்தை யடைந்தவராகலின் "பொன்மலை மே லாகாயம் போவார்க்குப்பூமியுள்ளோ" ரென்னவேயென் றங்ஙன முவமை கூறினார்.

ஞானிகளது மகிமையையறியாததா லவரு முலகத்தின் கண்ணிருக்கின்றார் யானு முலகத்தின்கண் ணிருக்கின்றேன், அவருமனித ரியானு மனிதனென்று கருதி யழைத்தானாகலிற் "பாற்கடலின்வாழரியை மண்டேரைக் கூவுந் தகைமைய தொக்கு" மென்றிங்ஙன முவமைகூறினார். (உ௰)

ரி-உக-அ-கை.)

ஆயிற்புத்தியோடு மனமொழி மெய்களா லவரைவணங்கி யென் மனைக்குத் தேவரீ ரெழுந்தருளுக வென்றொருவ னழைத்தாற் செல்வரோவெனின், மேற்கூறுகின்றார்.

கும்பிட்டுங் கீர்த்தித்துங் கோடி யுபசாரம்
வம்பிட்ட பத்தி வலைவழியை - நம்புவரோ
வூணுதி வாதனைக ளொன்றாத வப்பெருமை
வீணே விளைக்கு மெனின்.

(இ-ள்.) கும்பிட்டுங்கீர்த்தித்துங்கோடியுபசாரம் வம்பிட்டபத்தி வலைவழியை நம்புவரோ" எ-து. ஒருவன்வந் தஷ்டாங்க பஞ்சாங்கத்தோடு வணங்கியு மனேகதோத்திரங்களைப் பண்ணியுஞ் சுவாமிக ளடியேன்மனைக் கெழுந்தருளுகவென்று கோடிபேதங்களா யுபசாரங்களைச்செய்து மிங்ஙனமழைக்கும் புதுமைபொருந்திய பத்தியாகிய வலைநெறியை ஞானிகளாயினோ ரோர்பொருளாகக் கருதிச்செல்வரோ? ஆயி னன்போடுவணங்கி யன்னங்கொடுக்கிறே னென்றழைத்தா லவ்வன்னமாத்திரஞ்சென்று வாங்கிக்கொள்ளலாகாதோ வெனின்?

ஊணுதிவாதனைக ளொன்றாதவப்பெருமை வீணேவிளைக்குமெனின்" எ-து. ஊணுடுக்கைமுதலிய வாதனைகளையும் விரும்பாத அந்தவவா வறுதியாகிய பெருமை யவரிருக்குமிடத்தவர் வேண்டாவென்று தள்ளவும் வீணு யவ்வூணுதிகளைக் கொடுப்பிக்குமாயின். எ-று.

ப-ம். உபசாரமிகுதியைக் கோடியென்று மொருவரு மங்ஙனஞ் செய்யக்கண்டிலின்மையால் "வம்பிட்ட" வென்றுங்கூறினார்.

"உன்ஞுதிவாதனைகளெனவே" நோய் குளிர்கட்குமருந்துமுன்ற யுளும் வேண்டாரென்பதாயிற்று. (உக)

(கவி-உஉ-அ-கை.)

தாமுஞுதிகளைவிரும்பி யொருவரைப்பின்சேறலாகாதன்றியொருவரன்போடும் வணங்கி யூஞுதிகொடுத்தற்குத் தம்மனைக் கழைத்தாலுஞ் செல்லாதிருப்ப தேதுகாரணமெனின், மேற்கூறுகின்றார்.

கருமந் திரிவிதத்திற் கட்டவிழுங் கால
மரவுந் தவளையும்போ லாகி - யிருதலையிற்
கொள்ளியெறும் பாயுடம்பே கூற்றாகித் தோற்றுமெனி
லுள்ளினரு மூருமென்ஞ கும்.

(இ-ள்.) கருமந்திரிவிதத்திற்கட்டவிழுங்கால மரவுந்தவளையும்போலாகியிருதலையிற் கொள்ளியெறும்பா யுடம்பே கூற்றாகித் தோற்றுமெனின்,, எ-து. ஞானசாரியர் கிருபாநோக்கத்தானுங் கரசரண பரிசத்தானுந் திருவாக்கானு மவர தாணவமாயை கருமங்களாகிய கட்டுவிடுதலையாகாநின்ற காலமாகவின் றம்முடம்பே பாம்புந் தாமோர் தவளையும்போலாகி யவ்வுடம்பே யிருதலையு மெரிசூழ்ந்தகொள்ளியாகித் தாமக்கொள்ளிக் குழலுட்சுழலு மெறும்பாகி யவ்வுடம்பே தம்மைப் பறித்துச்செல்லுங் கூற்றாகித் தோற்றுமெனின் ?

"உள்ளினருமூருமென்ஞகும்" எ-து. இங்ஙனம் பகையாய்த்தோற்றுமுடம்பிற் குபசாரஞ்செய்யக்கருதியொருவ மவரழைத்துச்செல்லுமூரு மென்ன பயனைத்தருமவர்க்கும். எ-று.

ப-ம். பாம்பு தவளையைப்பற்றி நிற்றல்போ லுடம் பவரைப்பற்றி நிற்றலானு நெருப்பவியுமளவுங் குழற்கண் வருந்திச் சுழலு மெறும்புபோ லூழ்வினையறுமளவு முடம்புள் வருந்தியிருத்தலானுங் கூற்றுஉயிரைப்பிணித்துச்சேறல்போ லவரைப்பற்றி நின்று பிச்சையாதிக்குச் செல்லப்பண்ணுதலானு மங்ஙன முவமை கூறினர்.

ஒருவன் றனக்குப்பகையானார்மேல் வெறுப்புண்டாவது மன்றியப்பகைவர்க் கிதஞ்செய்வார்மேலும்வெறுப்புண்டாவதுபோ லவர்க்

குப்பைகையாகிய வுடம்பின்மேல் வெறுப்புண்டாவதுமன்றி யவ்வுடம் பிற் கிதஞ்செய்வார் மேலும் வெறுப்புண்டாமாகலி "னுள்ளினருமூரு மென்னருக்" மென்றார்.

திரிவிதத்திற் கட்டவிழுமென்றமையா லிரண்டுமேலும் வருவிக் கப்பட்டது. (௨௨)

(கலி-௨௩-அ-கை.)

ஞானசாரியரை யுடைந்தோரு மோரூரின்கண் ணொருவன் செய்யு முபசாரத்தை யங்கீகரிக்கவில்லையோ விவரென்னை யங்ஙனமங்கீ கரியா திருப்பதெனின், மேற்கூறுகின்றார்.

பிறவாத யோனி பிறந்துபிறந் தெல்லா
மறிவானு ரென் றறியா - வறிவை
யறிந்துமீ னண்ட வழிபருந்திற் குஞ்சாய்ப்
பிறந்தவர்க் ளேன்பார்ப்பார் பின்.

(இ-ள்.) பிறவாதயோனிபிறந்துபிறந்தெல்லா மறிவானுரென்றறி யா வறிவையறிந்து" எ-து. தேவமானிடப் பிறப்பின்றி மற்றப்பிறவா த யோனிபேதங்க ளெல்லாவற்றுள்ளு மளவில் காலஞ் சென்றுசெ ன்று பிறந்தெய்த்துப் பின்னர்த் தெய்வகதியாய்ப் பிறவிகட்கெல்லாந் தப்பித் தன்னையறிதற் கேதுவாய விம்மானிடப்பிறவியிற்பிறந்து மித் தேகத்துள்ளிருந் தெல்லாவற்றையு மறிவானாகிய யான் யாரென்றறி தற் கரிதாய வறிவை யிம் மானிடதேக மனேகத்தாற்செய்த சிவபுண் ணிய மேலீட்டா லிப்போதறிந்து?

"மீனண்டவழிபருந்திற்குஞ்சாய்ப் பிறந்தவர்களேன்பார்ப்பார்பி ன்" எ-து. நீரினுழைந்துசெல்லு மீன் முட்டை வழித்தோன்றுங்குஞ் சாகாயத்திற்செல்லும் பருந்தின்முட்டைவழித் தோன்றுங் குஞ்சாய் ப்பிறந்ததுபோற் பிறப்புக்கேதுவாய்ப்பிறந்த பிறப்புக்கணீங்கி வீட்டி ற் கேதுவாய்ப் பிறந்தோர்கள் மற்றையரைப்போலு மூருறவென்றேன் பார்ப்பா ரிப்போது. எ-று.

ப-ம். முட்டைவழித்தோன்ற லிரண்டிற்கு மொத்தாயினு முன்னீ ருட் சென்றதும் பின் னுகாயத்திற்செல்வது மொவ்வாததுபோன்

முன்னரு மிப்போதும் பிறந்தமானிடப் பிறப்பொத்ததாயினு முன்பிற ப்பிற்சென்றது மிப்போது வீட்டிற்செல்வது மொவ்வாதாகலி னிங்ங னமுவமை கூறினர்.

முற்பிறப்பிற் சிவபுண்ணிய மேலீட்டா லிப்பிறப்பி லெளிதிற்றன்னை யறிந்தமையா லறிந்து பிறந்தவர்களென்றார். தன்னையறிந்தாற் றலைவனையு மறியலா மாகலி "ஞானரென் றறியாவறிவையறிந்" தென்றார்.

(கலி-உச-அ-கை.)

இங்ஙன மூருறவாதி யொன்றும்வேண்டார்க்குப் பெருமையாதெனின், மேற்கூறுகின்றார்.

அரசர்க் குடைமை யளவற்ற பேறே
பெருமையா னாற்போலப் பெற்ற - வரிபிரமர்க்
கப்பாலாம் வாழ்வு மணுவாகி யாதுமற
விப்போ பெருமை யிவர்க்கு.

(இ-ள்.) அரசர்க்குடைமையளவற்றபேறே பெருமையானாற்போல, எ-து. அளவற்றதிரவிய மாடை பூடணாதிகளைப்பெறும் பேறே யரசர்க்குப் பெருமையானாற்போல?

"பெற்றவரிபிரமர்க் கப்பாலாம்வாழ்வு மணுவாகியாதுமற விப்போபெருமையிவர்க்கு" எ-து. அவ்வரசர் சுரர்முதலியோர் வாழ்விற்குமேலாய வாழ்வினைப்பெற்றவரிபிரமர் வாழ்விற்குமப்பாலாகிய பதமுத்திவாழ்வுகளு மணுமாத்திர மின்பமா யழியுமெனக் கண்டிருந்தவிக பரவாழ்வுகளி லியாதொன்றினும் பற்றற்ற விப்பற் றறுதியே யிவர்க்கிப்போது பெருமையாம். எ-று.

ப-ம். அரசர்க்குடைமை,, யென்று பொதுப்படக்கூறினமையா னு லவகைச்சேனை நால்வகையர ணாதேசங்கண் முதலியவுங்கொள்க.

அவர்க்கப்பேறு மேன்மேற் பெறுவது பெருமையானாற்போ லி வர்க்கப்பேறு மேன்மேல்விடுவது பெருமையென்பது மவர்க்கப்பேறின்மை சிறுமையாவதுபோ லிவர்க் கப்பேறு பெறுவது சிறுமையென்பதும், பேற்றின்மேற் பற்றுப் பிறவிக்கேது. அப்பேற்றின்மேற்பற்றறுதி வீட்டிற் கேதுவென்பதும், பிறப்பையடைதல் சிறுமை. வீட்டையடைதல் பெருமையென்பது மிதனாற்காண்க. (உ.௪)

(கவி-௨௬-அ-கை.)

இங்ஙன மிருந்த ஞானிகள் வீட்டிற்கேதுவாகிய சரிதாதிகளைத் தான்செய்யார்களோவெனின், அவர்செய்யுஞ் சரிதாதிக ளிவையென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

சரிதை யுடல்வெறுத்த றன்னை யறிதல்
கிரியோகங் கூடாமை கேளாத் - திருஞானம்
வெறின்மை பேரின்பம் விட்டுதியா மேலீடு
பேரின்மை தானே பெறல்.

(இ-ள்.) சரிதையுடல்வெறுத்த றன்னையறிதல் கிரியோகங்கூடாமை,, எ-து. அவர்கட்குச் சரிதையாவது, மலச்சுமை துக்கம விளைக்குங் குரம்பை யென்றறிந்து பவிருமிதனக்கண்டு மறைசுருக்குதன முதலியவற்றா னுடலத்தை வெறுத்தல். கிரியையாவது, தத்துவ முப்பத்தாறை யுந் தனித்தனிக் கண்டு தன்னின் முறைவினின்ற தன்மை யுள்ளபடியறிதல். யோகமாவது தங்குணத் தன்மையறிந்தவிட்டுத் தமக்குயிர்க்குயிரா யிருந்த திருவருளைக் கண்டு அவ்வருளைவடிவாகியிருந்து முன்னீக்கினின்ற கருவிகளோடுங் கூடாமை?

"கேளாத்திருஞானம் வெறின்மை பேரின்பவிட்டு தியாமேலீடு பேரின்மைதானே பெறல்" எ-து அமலமுமாகிய பானுமுண்டாங் கேட்டறியலாகாத வழுக்கியஞானமாவது, அவ்வருளைவடிவாயிருந்து தாஞ் சிறிதுந்தோன்றாது பரையேயாகிப் பெறின்மையையுமதனமேற் பேரின்பமவிட்டுத் தோன்றுத மேலீடுமில்லினபந்தப பெற்றே மென்னும் பெறின்மையும் பெறுதற்கேயாம் எ-று.

ப-ரை. ஞானாசாரியர் உபதேசமொழியா லறிவிக்கவறிதலாற் "கேளாத்திருஞான" மென்று மின்பமேலீடாமுன் விட்டுத்தோன்றலான் "விட்டுதியாமேலீ" டென்றுங்கூறினார். பேரின்மை யின்பாதீதம்.

க-து குறிப்பிட்டென்னும் திருவெண்பாமுதலிவை யைந்துந்திருவெண்பாவானு ஞானிகளின தியற்கை நெறிகளினதுமுறைமை யறிவித்தனவென்பது.

துறவு - முற்றிற்று.

ஆ - திருவெண்பா - ௱அகூ.

திருச்சிற்றம்பலம்



உ

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது

# அருளவத்தைத்தன்மை.

(அஃதாவது,) இங்ஙனஞ் சரியாதிகளைநீத்து வுட்டுறவு புறத்துறவுடையராய்ப் பிருதிவிமுதல் நாததத்துவ மீறாகச் சொல்லப்பட்ட தத்துவ முப்பத்தாறையுங்கடந் தாணவ விருளையுங்கடந் தான்மதரிசன முதலிய சுத்தாவத்தையி னிற்குமாறு தன்மை கூறலமையா லிவ்வதிகாரத்திற் கருளவத்தைத் தன்மையென்று பெயராயிற்று.

(கவி-க-அ-கை.)

சுத்தாவத்தையினின் றருளைத் தரிசித்தோர்க்கு விடயந் துன்பமாய்த் தோற்றுமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

உண்டொழித்துத் தேடு முடம்பாரா யொன்றுமுத
லண்டர்பதத் தப்பாலு மைம்புலத்து - முண்டு
மழுங்கினர்க்குப் போகம் வருத்தமாய்த் தோன்ற
வெழுந்தவருள் கெட்டே னிதென்.

(இ-ள்.) "உண்டொழித்துத்தேடுமுடம்பாராயொன்றுமுத லண்டர்பதத்தப்பாலுமைம்புலத்து முண்டு மழுங்கினர்க்கு" எ-து. ஒருடம்பிற் பிராரத்துவத்தை யுண்டொழித் தவ்வுடம்பி லவ்வினையையுண்டொழித்தற்கிடையே யிதாகிதங்களாகிய தொடர்பாற்றேடு மாகாமியத்தாற் றொன்றுதொட்டுவரு முடம்புகளையுடையரா யிப்பூலோகமாகிய வொன்றுமுதற் றேவர்பதவிக்கப்பாலு மாண்டாண்டுச்சென்றிருந் தைம்பொறிகளானு மவ்வவ் வுடம்புகட்கேற்ற விடயபோகங்களை யின்பமாகக்கண்டுண் டளவில்காலந் தழும்பேறினார்க்கு?

"போகம்வருத்தமாய்த்தோன்ற வெழுந்தவருள்கெட்டே னிதென்" எ-து. அப்போ தின்பமாய்த்தோன்றியபோக மிப்போது துன்பமாய்த்தோன்ற வுதயமாகிய திருவருள்கெட்டேனிதென்கொல். எ-று.

ப-ம். ஓர்பிரகாரமின்றிச் செய்தவினையின் பேதப்படியே தநுகரண புவனபோகங்களும் பேதித்துத்தோன்றலாற் "றேடுமுடம்பாராயண்டர்பதந் தப்பாலுமைம்புலத்துமுண்டு மழுங்கினர்க்" கென்றார்.

தருவாதிகள் பேதிப்பதாவண, நல்லதேசத்து நல்லோர்க ளங்கீக ரித்த போகத்தைப்புசித்தலானு நல்ல நினைவோடு நல்லசொல்லோடு நற்றொழிலைச்செய்தலானும், பொல்லாததேசத்துப் புவனபோகங்க ளைப் புசித்தலானும் பொல்லாத நினைவோடும் பொல்லாதசொல்லோ டும் புன்றொழிலைச்செய்தலானு மிவற்றுளொன்று நன்றுமொன்று தீ துமாய் மாறிமாறிவருதலானு மிவைமுதலாயவற்றாற் பேதிப்பதெனக் கொள்க. (௧)

(கவி-உ-அ-கை.)

சொரூபானந்தத்தை விரும்பிச் சுத்தாவத்தையினிற்போர்க் கிச் சொரூபானந்தங் கிடைத்திலதாயினு மிவ் வானந்தத்தையே விரும்பு வதன்றி யசுத்தாவத்தையிற்றிரும்பி யவ்விடயானந்தத்தை விரும்பலா காதென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

வாசகத்துங் கோவையினு மாணிக்க மாகவழுங்
காசைத் துறைபணந்த மாமதிலே - யாசை
யிருதலைப்பா லேக மெனவிரண்டா மித்தி
லொருதலைக்கா மந்துறவன் றே.

(இ-ள்.) வாசகத்துங்கோவையினு மாணிக்கமாகவழுங் காசைத்து றையணந்தமாம்,, எ-து. மாணிக்கமணிபோலாகப் புலவரானெடுத்துவ ழங்காநின்ற சங்கத்தார் முதலியோர்கூறிய வாசிரியப்பாக்களினும்,மா ணிக்கவாசக சுவாமிக ளருளிச்செய்த திருச்சிற்றம்பலக்கோவையார் முதலிய கோவைகளினும், காமத்தின திலக்கணமாகக் கூறப்பட்ட கி ளவித்துறைக ளனந்தமாகும் ?

"அதிலேயாசை யிருதலைப்பாலேக மெனவிரண்டாமித்தி லொ ருதலைக்காமந் துறவன்றே" எ-து. அக்கிளவித் துறைகளுட் காமந்த லைவனுந் தலைவியுமாகிய விருவர்பாலுஞ் சமனொத்துக்கூடுவதாகிய வி ருதலைக் காமமெனவு மொருவர்பான் மிகுந்து மொருவர்பாற் குறைந் துங் காமமொவ்வாது கூடுவதாகிய வொருதலைக்காமமெனவு மிரண்டு ளடங்குவதாம். இவற்றுட்டலைவன் விழையாதிருப்பத் தலைவிவிழைந் து பற்று மொருதலைக்காமம்போல விஷயானந்தத்தைத் துறந்து சொ ரூபானந்தத்தைப் பெறும்பொருட்டுச் சுத்தாவத்தையி னிற்போர் கி ச்சொரூபானந்தங் கிடைத்திலதாயினு மிவ்வானந்தத்தையேபெற வி ரும்பித்தொடர்ந்து நிற்பதன்றே துறவாவது. எ-று.

ப-ம். தலைவன்கூடி யின்பங் கொடாதிருப்பினுந் தலைவி தனதுக ற்பிற் பிறழா விழையா தத்தலைவனையே விழைந்து நிற்றல்போல்

சொரூபானந்தந் தனக்குக் கிடைத்திலதாயினுந் தனது தவக்கற்பால் விடயானந்தத்தை விழையாது சொரூபானந்தத்தையே விழைந்து நிற்கவேண்டுமென்பதுந் தலைவி கற்பினைக்கண்டு தலைவன் காருண்ணியத்தா லவட்கின்பங் கொடுத்தல்போ லிவன் றவக்கற்பினைக்கண்டு சிவங்காருண்ணியத்தாற் றனதானந்தத்தை யிவனுக்குக் கொடுக்கவேண்டுமென்பது மிவ்வுவமைக் குறிப்புகளாற்காண்க. "வாசகப்போலிருத்தலி னாசிரியப்பாவை வாசக" மென்றார். (௨)

(கலி-ரு-வ-ளை.)

ஞானசாதகரிலக்கணமுஞ் சாத்தியா திலக்கணமு மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

சாத்துவித மெட்டாய்த் தசவவத்தை யாய்த்தன்னை
நீத்தவனாய்த் தானாய்ப்பின் னேயமாய்க் - கூத்ததெலாஞ்
சுத்த வவத்தைத் துவட்டித் துகளற்ற
வத்துவிதாக் கேதுமுறி யா.

(இ-ள்) சாத்துவிகமெட்டாய்த் தசவவத்தையாய்த்தன்னை நீத்தவனாய்த்தானாய்ப்பின்னேயமாய்க் கூத்ததெல்லாஞ்சுத்தவவத்தைத்துவட்சி,, எ-து. ராசத தாமத காரியங்களையெல்லா நீக்கிச் சாத்துவித காரியமாகிய நிராசைமுதலிய வெண்குணங்களையு முடையவனாகி அருக்கியநோக்கமுதலிய பத்தவத்தைகளையு முடையனாகி இந்த நற்குணங்களாற் றத்துவ முப்பத்தாறையுங்கடந்து தன்னையறிந் தருளைத்தரிசித்துத் தற்போத மடங்கினவனாகிப் பின்னர்ப் பகாமிய தானாகிப் பின்னா நேயத்தழுந்தினோனாகி யிங்ஙன மொருவ னுண்ணிதாயறிந்துசென்றதெல்லாஞ் சுத்தாவத்தை யநுபவங்களாகும்?

"துகளற்றவத்துவிதர்க்கேதுமுறிபா" எ-து. யிந்தசுத்தாவத்தைகளை யறிந்துசென்ற போதமற்றுச் சிவத்தோடு மிரண்டறக்கலந்த வத்துவிதத்தை யுடையோர்க்கு முற்கூறிய வநுபவங்களுள் யாதொன்றேனுந் தோன்றா திவர் மவுனத்தரா யிருப்பர். எ-று.

"சாத்துவிதமெட்டாவன" நிராசை-தவம்-பொறுமை-கிருபை-சந்தோடம்-வாய்மை-அறிவுடைமை-அடக்கமுடைமை-இவை யெண்வகையுமெனக்கொள்க. தசவவத்தையாவன, பிரபஞ்சத்தை மாயாவடிவமாய்க்காணு தருள்வடிவாய்க் காணு மருக்கியநோக்கமும், கருவிகளை நியதிகளையுஞ் சிந்தனையும், முற்பிறவியிற்பட்ட துன்பங்களை நி

னைத்து நெட்டுயிர்ப்பெறிதலும், திருவருள்மேலிட்டா லுடம்பி லிளஞ் சூடெழுதலும், ஊணுறுதிகளைத்துறத்தலும், ஒருவரோ டுரையாடற்கு மானமுறுதலும், மவுனமாயிருத்தலும், பித்தேறினாற்போலப் பிரபஞ் சப்பகுப்புத் தோன்றாதிருத்தலும், பிராணவாயுவிறந்து மூர்ச்சித்திரு த்தலும், போதமிறந்து நிற்றலுமாகிய விவைபத்துமெனக்கொள்க.

சுத்தாவத்தைகளோடுங்கூடி யவற்றிற்றோன்று மநுபவங்களைப் போதஞ் சுருங்கினின் றறிதலானு மப்போதந் தேய்தல்வளர்தற்குத்தக் கதா யோர்காலுயர்ந்த வநுபவமாயு மோர்காற்றாழ்ந்த வநுபவமாயு மாறித்தோன்றலானுந் "துவட்சி" யென்றார்.

கேவலாவத்தையோ டாணவ நீங்கிற்றாயினு மதனது காரணம் போதமிறக்குமளவு மிருத்தலின், போதத்தைத் தூகளென்றார். (௯)

(கலி-ச-அ-கை.)

அவ்வநுபவங்களை யறிந்துசொல்வது வாக்காகலி னிவ்வாக்கினை மவுனமாக்குவது முத்தியன்றோவெனின், முத்திநிலையீதென் றித்திரு வெண்பாவிற் கூறுகின்றார்.

உரையொடுங்கிற் போத முதிக்கு மொழிவே
யருளா மதன்போக் கசையாப் - பரையோகம்
போனாற் சுகாதீதம் புண்ணியர்க்குப் பொய்யுதிய
தேனோர்க்குப் பல்விதமா கும.

(இ-ள்.) உரையொடுங்கிற்போத முதிக்குமொழிவே யருளாமதன் போக்கசையாப் பரையோகம் போனாற்சுகாதீதம், எ-து. வாக்கினைம வுனமாக்கி னுள்ளே போதந்தோன்றுமாகலி னவ்வாக்கு மவுனமுத்தி யன்று. ஆயிற்போதமடங்கின் முத்தியோவெனின், போதமடங்கினரு ட்டரிசனமாகலி னப்போதமடங்கன் முத்தியன்று. ஆயினருட்டரிசன நீங்குதன் முத்தியோவெனி னவ்வருட்டரிசனம் நீங்கிற் போதஞ் சிறிது மசையாத பரையோகமாகலி னவ்வருட்டரிசனம் நீங்குதன் முத்தியன் று. ஆயிற்பரையோக நீங்குதன் முத்தியோவெனின், பரையோக நீங் கிற் சுகப்பேறுமாகலி னப்பரையோக நீங்குதன் முத்தியன்று. ஆயின ச்சுகப்பேறு நீங்குதன் முத்தியோவெனி னச்சுகப்பேறு நீங்குதலே சு காதீத மிச்சுகாதீதமே முத்திநிலை?

"புண்ணியர்க்குப் பொய்யுதியா தேனோர்க்குப் பலவிதமாகும்" எ-து. இச்சுகாதீத முத்தியையடைந்த புண்ணியர்க்கு மேற்கூறிய சுத்தாவத்தையிற் றோன்றும் பொய்களியாவுந் தோன்றுது. இம்முத்தியைப்பெறு தச்சுத்தாவத்தையி னிற்போர்க் கநுபவம் பலவிதமாய்த் தோற்றும். எ-று.

ப-ம். பரையோகங் கூறியதற கபபாற் சுகாதீதங் கூறினமையா லிவற்றிற் கிடையிற்றோன்றுஞ் சுகப்பேறுவருவிக்கபபட்டது.

பரிபூரணசிவத்திற்குத் தமமைக்கொடுத்தலான் மெய்ஞ்ஞானிகளைப் "புணணிய" ரென்றா. சுகாதீதத்திற்குச் சுத்தாவத்தைக் காட்சிய பொய்யாகலிற் "பொய்யுதியா" தென்றா. (௬)

(கவி-ரு-அ-யைக.)

அச்சுகாதீத முத்திநிலையடைதற்கேதுவாகிய சுத்தாவத்தையி னிற்போரது குணஙக ளியாவையென்ற மாணாக்கனைநோக்கி, கருவிகணீங்கியவிடத்து வருங்குணமுந் தன்னையறிந்தவிடத்து வருங்குணமு நிருவருட்டொன்றியவிடத்து வருங்குணமு மானந்தந்தோன்றியவிடத்து வருங்குணமு மிக்செய்யுளாவிற் கூறுகின்றா.

கருவி கழல வனைநோக்காஞ் சிநதை
பெருமூச்சாம போதம பிறியி - லருளாய
வெதும்பி யுடலவெறுக்கு மின்பாய்விகள
முதிரந்துறையு நாளுமொடுங்கும.

(இ-ள்) கருவிகழலவனா நோக்காஞ்சிநதை பெருமூச்சாம போதம்பிறியில்,, எ-து. கருவிகணீங்கவே மலமேனின்று நோக்குவோர்க்கு நிலத்தின்கண்ணுள்ள பொருள்க ளுருகித் தோற்றுமாபபோலப் பிரபஞ்சமெல்லாம பொய்யாய்த் தோற்றுவதா மக்கருவிகளு ளதோமுகமாய்நின்ற போதமவற்னறப் பிறியி னூாத்தமுகமாய் நின்று தன்னையறியு மங்ஙனந் தன்னையறிந்தபோ திங்ஙனமிருக்கின்றயா னெறுமபுகளா ளுங்கூ ழரிப்புண்டதுபோ லளவிலகால மக்கருவிகளா லரிபடுண்டேனே யென்னுஞ் சிநதனையா னெட்டுயிர்ப்புளவாம?

"அருளாய்வெதும்பி யுடல்வெறுக்குமின்பாய்விகள முதிர்ந்துறையுநாளுமொடுங்கும்" எ-து தன்னையறிந்தபின்ன ரருட்டரிசனமுண்டாய்ப் பின்ன ரவ்வருளே தனக்குவடிவாகி யிமமாயாவுடலம் வெ

தும்பி யிதனைவெறுப்பன் பின்ன ரானந்தமுண்டா யிவ்வானந்தமேலீ டாகிய வுன்மத்தந் தலைமீக்கொண்டு மவுனமாயிருப்ப னென்பதன் றிப்பிரப ஞ்சத்தார்க்கு நாணுவதாய நாணமுமுண்டாம். எ-று.

"போதம்பிறிபி" லென்றதனாற் றன்னை யறிந்தென்பது வருவிக்கப்பட்டது. "அருளா" வென்றதனா லருட்டரிசனம் வருவிக்கப்பட்டது நாணமொடுங்கலாவது, நீராடல் பூசனையாதி செய்திலனென் றுலகத்தார் பழிப்பது குறித்துவரு நாணமெனக்கொள்க. (ரு)

(கவி-சுஅ-அ-கை.)

கருவிகளைப் பொய்யென் றறிந்தவிடத்துவருங் குணமுந் திருவரு ளுதித்தவிடத்து வருங்குணமு மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

வேர்க்கும் விழிததும்பும் பொய்யறியின் மெய்வெதும்பி
யார்க்கும் விறைக்கு மருளுதிப்பின் - வாக்குமன
நின்றுபரி பூரணமா நேயத்தே கார்க்கதமாய்க்
கன்றிப் புளகிதமாங் காண்.

(இ-ள்.) வேர்க்கும்விழிததும்பும்பொய்யறியின்மெய்வெதும்பியார்க்கும்விறைக்கும், எ-து.பொய்யாகியகருவிகளை யுள்ளபடிபொய்யாயறியின் மெய்யில் வெயர்வை யரும்பும் விழியி னீர்த்ததும்பு மெல்லாம பொய் யென்றறிந்து கொண்டேனென் றுடலத்திளஞ்சூடு மூலாரவாரிப்பன். பின்னர்த் தன்னை யுள்ளபடிகண் டொன்றினையு நாடாதுடலம சைவறவிருப்பன்.

"அருளுதிப்பின்வாக்குமன நின்றுபரிபூரணமாநேயத்தேகார்க்கதமாய்க் கன்றிப்புளகிதமாங்காண்" எ-து.பின்னருதோன்றுமிடத்துவாக்கு மனங்களினின் றவ்வருட் பரிபூரணமாய்த்தோன்றவிதற்குமுதலாய நேயத்தை யென்றைக் கடைவேனென் றந்நேயத்தை நாடி மேகங் குமுறுவதுபோலா யுள்ளேகுமுறி யுளம்வெதும்பி யுடல முரோமாஞ்சலியாம். எ-று.

க-து. வாக்கு மனங்களினின் றருட்பூரணமாய்த்தோன்றுவதாவது, மனத்தா னினைந்தநினைவு நினைந்த தில்லையாயும் வாக்காற் சொன்ன சொற்கள் சொன்னதில்லையாயுந் தனக் கநுபவமாய்த் தோன்றுவதாமெனக்கொள்க. (சு)

(கலி-எ-அ-கை.)

அருள்மேலிட்டகா லடக்குங்குண மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பேயைப்பெண் ணென்றிருந்தும் பித்தளைக்குப் பொன்றோற்று
மாயத்தா லுண்டுமன மாண்டுமயல் - போயத்
திடுக்கமே பித்தாய்த் தெளியலா னுற்போ
லடக்குமருண் மேலிட்ட காள்.

(இ-ள்.) பேயைப்பெண்ணென்றிருந்தும்பித்தளைக்கும்பொன்றோற்றுமாயத்தாலுண்டு மனமாண்டு மயல்போய், எ-து. பெண்களைப் பேய்களைப்போலும் பிடித்து வாட்டுவரென்று கண்டிருப்பதாயும்பித்தளைக்குப் பொன் றோற்றப்போவதாய்க் காண்பதாயு முதாவெரிவாய்த்தோன்று மாயத்திற்குக் காடி கூழ்முதலியவுங்க ளியாது கிடைப்பினும் வாங்கியுண் டவைகண்மேல்வைத்த மயலும்போ யவற்றை மெய்ப்பொருளாகக்கா ணு மனமுமிறந்து;

“அத்திடுக்கமேபித்தாய்த் தெளியலானுற்போ னடக்குமருண் மேலிட்டகாள்” எ-து. அப்பொருந்த வருந்தல்களையு மவற்றிற்கேதுவாய பொன்னையும் விரைந்து கெடுகாட்டிறவித் துன்பத்தால் வருந்தினுமெயன்னு மந்தத் திடுக்கத்தானே விடாப்பிராந்தியா யறிவுமயிர்க்கியங்கொண்டோனைப்போலவும் விளங்குந் திருவருண்மேலிட்டகாலத்து. எ-று.

ப-ம். பேய்பிடியுண்டு விடுபட்டோனுக் கோர்காலத்ததனைக்கண்டபோது பயந்தோற்றல்போன் முன் பெண்களால் வருந்திய வருத்தத்தைநோக்கி யவளைக்கண்டபோது பயந்தோற்றலா னங்ஙன முவமைகூறினார். “பித்தளைக்குப்பொன்றோற்று” மென் றதனினு மிழிவாய்க்கூறினமையா லோட்டுச் சின்னங்களையுஞ் சிறுகற்களையும்போற் காண்பாரென்ற தாயிற்று.

எங்கும் பரிபூரணமாய வருள்வடிவாயிருந்தலானும் பொன் பெண் மண் ணூனுடலென்னு மைவகையும் வெறுத் துலகத்தாரோடு மாறுபட் டிருத்தலானுந் “தெளியலானுற்போ” லென்றார். (எ)

(கவி-அ-அ-கை.)

கழிந்தநாட் கிரங்குவரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

மலட்டுமக னீங்கி வரக்கண்ட தாய்தா
லலத்தி மகிழு மதுபோ - லுலப்பிலாக்
காலங் கழிந்ததையுங் காணுத்தைக் கண்டகளிப்
பாலு மழுதுசிரிப் பார்.

(இ-ள்.) மலட் டுமகனீங்கிவரக்கண்டதாய்தா லலத்திமகிழுமதுபோ ல,, எ-து. நெடுநாண் மலடிருந்து பின்னா ரிதாய்ப்பெற்ற புதல்வன்ற ன்மனைவிட்டு நீங்கி யயன்மனையிற் சென்று மீண்டுவர வெதிர்கண்ட தாய் சென்றெடுத்து மார்போடணைத்து முன்னரவனைப்பெறாத கால த்தையு மிப்போ தவனைப் பெற்றுக்கண்டகாட்சியையு நினைந்து தாலா ட்டுதலோ டழு தல்வழகையோடுஞ் சிரிக்குமதுபோல ?

"உலப்பிலாக்காலங் கழிந்ததையுங்காணுத்தைக் கண்டகளிப்பா லு மழுதுசிரிப்பார்" எ-து. திருவருளைப்பெறா தளவிறந்தகாலம் பிறவி யில் வீணாளாய்க் கழிந்ததைக் கருதிபவதனாலு மக்காலங்களு ளோரா காலமாயினுங் காணாத வத்திருவருளை யிப்போது கண்ட களிப்பாலு மவ்வருளைத் தோத்திரம பண்ணலோடழு தல்வழகையோடுஞ் சிரிப் பார திருவருண்மேலீ டடையப்பெற்றோர். எ-று.

ப-ம். "தாலலத்தியென்" றுவமைகூறினமையா லருளைத் தோத் திரம்பண்ணுதல வருவிக்கப்பா டது. அரு ட்மிடத்துத் தோற்றலா னதனை மகவாவுவமித்துக்கூறினா. தால்-தாலாட்டுதல். அலத்தல அ ழுதல். (அ)

(கவி-கூ-அ-கை.)

சுகாதீதமுத்திபைப் பெறா திங்ஙனந் திருவருண் மேலீட்டைப் பெற்றோர்க்குப் பிறப்புண் டாகாதோவெனின், அருண்மேலீட்டையு டையோர்க்கும் பிறப்பின்றென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

நடைதளர்ந்து மெய்ம்மறந்து நாண மழிந்து
வுட்டளர்ந்து கீழ்க்குரலிட் டேண்போய் - மடலெடுப்பாய்ச்
சத்தாதி கெட்டுமனந் தாக்கற்றுச் சந்தழிந்த
பித்தர்க்கு மர்காப் பிணி.

(இ-ள்.) கடைதளர்ந்து மெய்மறந்து நாணமழிந்து வுடறளர்ந்து கீழ்க்குரற்பேசுமாமே யருளமுதம் புசித்தலிற் கிட்டேண்போய்,, எ-து. கருவிச்சேட்டைகளடங்குதலினடை தளர்ந் திருளேவடிவாயிருத்தலி னுடம்புமறந் துடம்புமறத்தலிற் பிரபஞ்சிகள் பழிப்பாரென்பது குறித்துவரு நாணமழிந் துண்டிமேல விருப்பின்மையா னுடறளர்ந்து மன மவுனியாயிருத்தலிற் கீழ்க்குரற்பேச்சா யருளமுதம் புசித்தலிற் சிற்றூ ஹுண்பதாய் ?

"மடலெடுப்பாய்ச் சத்தாதிகெட்டுமனந் தாக்கற்றுச்சங்கழிந்தபித்தர்க்கு மாகாப்பிணி" எ-து. அருளேயேயன்றி மற்றொன்றையுநாடாமையின் மடலெடுப்பான்போல வைந்தவாவு மற்றமையாற் சத்தாதி விடயங்களுமிறந் திச் சத்தாதிவிடயங்க ளிறந்தமையான் மன மொன்றோடுந் தாக்கற்று மன மொன்றோடுந் தாக்கற்றமையா லருளென்றுந் தானென்று மின்றி யிரண்டற்ற விவ்வரு டலைமீக்கொண்ட பித்தர்க்குஞ் சுகாதீத முத்தியை யடைந்தோரைப்போற் பிறவிநோயுண்டாகாது. எ-று.

ப-ம். அருண்மேலிட்டடையும் பிரபஞ்சப் பற்றொழிவையு முடையோர் தேகாந்தத் தறிவோடுஞ்சென்று சுகாதீதமுத்தியை யடைவாராகலிற் "பித்தர்க்குமாகாப்பிணி" யென்றார். (௬)

(கவி-ம-அ-கை.)

ஆனந்தம்பெற்றோர் குண மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

குறும்பாட்டும் புன்சிரிப்புங் கூர்த்திமையா நோக்கும்
வெறும்போகஞ் சாய்ந்து விழினு - மறந்த
திகைப்பும் விதிர்ப்புந் திமிர்ப்பும் விறைப்பு
முகைப்புந் தெளிந்தறித லும்.

(இ-ள்.) குறும்பாட்டும்புன்சிரிப்புங்கூர்த்திமையாநோக்கும்,,எ-து. தாமறிந்த பாட்டுகளுட் சிலபாட்டா னருளைத் தோத்திரம்பண்ணுவதாய குறும்பாட்டும், ஆனந்த மகிட்சியாற்றோன்றும் புன்சிரிப்புமுட்புறனு மவ்வானந்த பூரணத்தை நுண்ணிதாய்ப் பார்த்துக்கொண் டிருப்பதாய விமையாநாட்டமும் ?

"வெறும்போகஞ்சாய்ந்துவிழினு மறந்ததிகைப்பும் விதிர்ப்புந்திமிர்ப்பும் விறைப்பு முகைப்புந் தெளிந்தறிதலும்" எ-து. தாமொன்றையும் விழையாதிருப்பினுந் தமதுசந்நிதியிற் பொய்ப்போகங்கண் மிகவுஞ் சாய்ந்துவந்து கிடப்பினு மித்துன்பங்க ளிண்டேன் வரத்தவெ

ன் றவற்றைச்சிறிதுநினையாததிகைப்பு மவற்றைக்கண்டபோ துடன டுக்குறுதலும் பஞ்சேந்திரியங்கட் குரிய விடயங்களோர்படி வவ்விடய ச்சுவை தோன்றாத் திமிர்ப்பும், பூதம்-பேய்-புலி-கரடி முதலிய வந்த காலத்துங் கற்றூண்போலத் தேகமசைவறவிருக்கும் விறைப்பு மானந்த மிகவும்வந்து தாக்குதலா னெழுந்துகுதித்தாடு முகைப்பு மங்ஙனமாடிய வானந்த மேவீட்டாற்றோன்றாது அவ்வானந்தமேலீடு சிறிதுநீங்கியபோ திப்போ தியாமென் செய்தோமென்று தெளிந்தறிந்து கோடலுமாகிய விக்குணங்களெல்லாம் பனையோக நீங்கி யானந்தம் பெற்றோர்க்குத் தோன்றுவனவாம். எ-று.

ப-ம். இங்ஙன மறிவுந்துறவுமுடைய ஞானிகளைப் பத்தராயுள்ளாரெலாருமன்னபானங் காய் பழ மாடைமுதலிய கொடுவந்து வைத்து வணங்குவராகலின் "வெறும்போகஞ்சாய்ந்துவிழினு" மென்றார்.

வெறும்போகம்-பொய்ப்போகம். சாய்ந்தென்பது மிகுதிமேலே நிற்றது. (௯)

(கலி-௰௧-௨௩-கை.)

இங்ஙனம் பூரணானந்தமபெற்றோர்க் காடலும் பாடலு முண்டாவதென்னையெனின், ஞானிகட்குப் பூரணவடிவம்பெற்றமையா லாடலும், ஆனந்தம்பெற்றமையாற் பாடலுமுண்டாமென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

காலவந் தவர்க்காட்டங் கைவந் தவர்க்காட்ட
மால்முந்தி வந்தவர் வாய்ப்பாடு - மேல்கொண்ட
வானந்த வுல்லாசத் தாச்சரிய மாரறிவா
ருனம்போற் காணு முலகு.

(இ-ள்.) கால்வந்தவர்க்காட்டங்கைவந்தவர்க்காட்ட மால்முந்திவந்தவர்வாய்ப்பாட்டும்,, எ-து. பிறவி முடவராயிருந் திடையிற்றெய்வகதியாற் கால்நடக்கவந்தவர்க் காட்டமுண்டாவதுபோலுங் கைவராதிருந்திடையி லங்ஙனங் கைவந்தோர்க் காட்ட முண்டாவதுபோலுந்தா ங்கூடி யநுபவித்த பெண்மே லாசை தலைமீக்கொண்டு வந்தவர் வாய்ப்பாட்டுப்போலும் ?

"மேல்கொண்டவானந்த வுல்லாசத்தாச்சரியமாரறிவா ருனம்போற்காணுமுலகு" எ-து. தம்மைமறைத்து மேற்கொண்டெழுந்தவானந்த வுல்லாச வதிசயத்தா லவர்க்காடலும் பாடலுமுண்டா மவ்வா

னந்தாதிசயத்தை யதனைப்பெற்ற ஞானிகளறிவதன்றி மற்றை யாரறிவாரவர்க்காடல் பாடல்களைப் பயித்தியமிகுதியா லுண்டாவனபோற் காண்பாருலகத்தார். எ-று.

ப-ம். நெடுநாட் காலுங்கையும் வராதிருந் திடையிலவைவந்தோரக் காட்டமுண்டாவதுபோ லளவிறந்த காலமு மலச்சிறையிற் கிடந்தோர்க் கிப்போ தச்சிறை விடுதலையாய்ப் பரிபூரணவடிவைப் பெற்றமையா னிவர்க்காடலும், தாமநுபவித்த பெண் ணின்பவாசனை யுள்ளத்திருத்தலா னவர்க்குப் பாடலுண்டாவதுபோற் றுன்ப போகத்தையே யளவில்காலம் பொசித்தோர்க் கிப்போது நிரதிசயானந்தங் கிடைத்தமையாற் பாடலு முண்டென்ப திவ்வுவமைகளாற்காண்க.

"ஊனம்போ" லென்றமையா லூனமன்றென்பதாயிற்று. உலகென்பதாகுபெயர். "கைவந்தவர்க்காட்ட" மென்பதற் கருத்த மோர்வித்தையாதி முன்கைவராதிருந்து பின்கைவந்தபோ தாட்டமுண்டாவது போலு மென்கினுமாம். (௰௧)

(கவி-௰௨-அ-கை.)

ஆனந்த மவுனமதனை யடைந்த ஞானிகள் போதமிழந்தோராகலின், இங்ஙன நிர்விகாரியாயிருந்தோர்க் கந்தவிகாரிகள்போலு மாடல்பாட லெங்ஙன முண்டாமென்ற மாணாக்கனைநோக்கி, அவர் நிர்விகாரிகளாயிருந்தே யாடுவர் பாடுவரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அறிவு பறிகொடுத்திவ் வாக்கையற மாறிப்
பெறுதி யிழப்புதியாப் பித்தி - னறிசென்
றலையற்ற நித்தமோ ராளற்ற கட்டு
லுலைவுற்ற தோரிற்ப தோ.

(இ-ள்.) அறிவுபறிகொடுத்திவ்வாக்கையறமாறிப் பெறுதியிழப்புதியாப்பித்தி னறிசென்று,, எ-து. முன்னர் விடயானந்தத்திற்குத் தமதறிவைப் பறிகொடுத்ததுபோ லிப்போதுமாறிச் சொரூபானந்தத்திற்கவ்வறிவைப்பறிகொடுத்து முன்னர்க்கூடியிருந்த விம்மாயாவடிவமற்றதுபோக விப்போ தருள்வடிவாய் மாறிப்பெற் றவ்வருளே வடிவாகலினோர்பொருளைப் பெற்றோமென்னும் பெறுதியு மோர் பொருளையிழந்தோமென்னு மிழப்பு மிவற்றான்வரு மிதாகிதங்களுந்தோன்றுதவா

ணந்தப்பயித்திய மீக்கொண் டேரிடத்துச் சிறிதேனும் விகாரமுண் டாகாது. இதனை யறிவிற்சென்று பார்த்தறிதி. இஃதன்றி ?

"அலையற்றநீத்தமோ ராளற்றகப்ப லுலைவுற்றதோனிற்பதோ" எ-து. அலையின்றிய சாகரத்தினிற்கு மோராளுமின்றிய கப்ப லசைவு றுகின்றதோ வசைவிற்று நிற்கின்றதோ ? அஃதெங்ஙனமசைவற்று நிற்கின்ற ததுபோலு மவுனானந்தசாகரத்தின் முப்பத்தாறுதத்துவங்க ளுந் தற்போதமு மிறந்துநின்ற ஞானிகளு மசைகிலரென் றித்திட்டா ந்தத்தானுங் கண்டுகொள்க. எ-று.

க-து. "அலையற்றநீத்தத்தை" மவுனானந்தத்திற்கு மாளற்றிருத்த லைகருவிகளிறந்து நிற்றற்கு மசைவற்றகப்பலைப் போதமிறந்தஞானிக ளதறிவிற்கு முவமித்தார். அறிவுபறிகொடுத்தல்-ஆனந்தமயமா யழுந் தல். (௱௨)

(கவி-௱௩-ஆ-வகை.)

அவர்பாழ் ஞானாடி ஞானாபிஷேகன் விகாரிகளலரென் றித்திருவெண்பா விற் கூறுகின்றார்.

செகஞ்சிரிக்கத் தாஞ்சிரித்துச் சீபேயென் றோட்டி
லகம்புறங்காட் டேச்சுக்குற் றற்றுத் - திகம்பரியாய்த்
தானந்தம் பாடிவிண்ணிற் றட்டத் துணங்கையடித்
தானந்தக் கூத்துடிப் பார்.

(இ-ள்.) செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச் சீபேயென்றோட்டி லகம்புற ங்காட்டேச்சுக்குற்றற்றுத் திகம்பரிபாய்,, எ-து. உலகநடைதெரியாத பேயரென்று சகத்தோர் தம்மைப்பார்த்துச் சிரிப்ப ஞானநெறிதெரி யாத மலப்பேயரென்று தாமு மவரைப்பார்த்துச் சிரித்துப் புறத்திண ணைப் பொதுச்சாவடிகளிற் றூமிருந்தவிடத் தவர்வந்து சீ பேயரே போமென் றோட்டினு லியாதொன்றுங் கூறு தவ்விடம்விட்டு நீங்கிப் புறங்காட்டை நன்மனைபோற்கொண் டசுத்தமென்னு மருவருப்புச் சிறி துமற்றுத் திகம்பரிகளா யவ்விடத்திருந்து ?

"தானந்தம்பாடிவிண்ணிற்றட்டத்துணங்கையடித் தானந்தக்கூத் துடிப்பார்" எ-து. தமது போதஞானமானவிடத்துப் பாடிச் சிதாகா சவெளியிற் பொருந்தி நின்று துணங்கைக்கூத்தைக் குறித்தாம்படி கை யடித் தானந்தநடனம்பண்ணுவா ரவ்வானந்தபூரணராயினோர். எ-று.

ப-ம் உலகர்க்கு ஞானிகண் மாறுபாடா யிருத்தலானும். ஞானிகட் குலகர் மாறுபாடாயிருத்தலானுஞ் "செகஞ்சிரிக்கத் தாஞ்சிரித்" தென்றார். உலகத்திற்குஞானம்-பேய். ஞானத்திற் குலகம்பேய். என்னுமுலகவழக்குமுமது பிரபஞ்சமெல்லா மானந்தபூரணமாய்த்தோற்றலிற்சுடுகாட்டசுத்த மவர்க்குத் தோற்றுதென்றதறிக.

"தானந்தம்பாடி" யென்றதனாற் போதமிறந்து நின்றுபாடினரென்பதும் "விண்ணிற்றட்டடிப்பா" ரென்றதனாற் பரிபூரணானந்தமாகு நடிப்பாரென்பதுங் காண்க. (௰௩)

(கலி-௰௪-அ-கை.)

"நீர்கூறியவாறே யெல்லாவற்றையுந் துறந்து சிவவேடம் பூண்டுகொண்டு தவங்களைச்செய்து சிவாலயங்கடோறு மாடிப்பாடியழுது சிரிக்கின்றோர் திருவிகாரி ளலரோவெனின், ஞானிகள்போ லடிக்கின்றோரைப் பொய்ஞானிகளென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

விபரீதப் பூணு முடையும் விசிய
லபிமா னமுமவரா லாட்டுந் - தபசுபோற்
செய்யுஞ் சடங்குந் திகைப்புஞ் சிதம்பரத்தி
லையன் றனக்கறிய லாம்.

(இ-ள்.) விபரீதப்பூணுமுடையும்விசிய லபிமானமுமவரா லாட்டுந்தபசுபோற் செய்யுஞ்சடங்கும், எ-து. பார்த்தபேருக்கு விபரீதமாய்த் தோன்றும்படி சிரஞ் செவி களங் கர மார்பு முதலியவிடங்களின் மிகவும் பூண்டுகொள்ளு முருத்திராக்கப் பூண்களு முத்தூளனமு மொட்டுவேட்டியுடையும் வார்த்தையிலு மியாஞ் சிவமதமென்று பிடித்துப்பேசு மபிமானமு மவரிடத்துண்டா மாடல்பாடல்களுந் தவசுபோற்செய்யு ஞானசாரங்களும் ?

"திகைப்புஞ்சிதம்பரத்திலையன்றனக்கறியலாம்" எ-து. அவ்வேடத்திற்கு நடைக்குமுரிய பரிபூரணஞான மகத்தின்றித் திகைத்திருத்தலுமாகிய விவை யுடையாரது கருத்தினைச் சிதாகாசத்திற் பஞ்சகிருத்திய நடனம் பண்ணுகின்ற பரமசிவனது திருவுளத்திற்கே யறியலாமன்றி யூற்றையர்க் கறியலாகாது. எ-று.

ப-ம். ஆபரணம்போற் பூண்டுகோடலின், உருத்திராக்கத்தைப் பூணென்றார். உருத்திராக்கங் கூறினமையா லுத்தூளனம் வருவிக்கப்பட்டது.

அகத்துஞானமின்றிப் புறத் திங்ஙனங் காட்டுவனவெல்லாந் தற்போதத்தா லுண்டாவதாகலி னிவர் நிருவிகாரிக ளலரென்பதுங் காண்க. இவர்களும் ஞானிகள்போற் பிறர்க்குத் தோற்றலிற் "சிதம்பரத்தி லேயன் றனக்கறியலா" ரென்றார். (௰௬)

(கவி-௰௫-அ-கை.)

மெஞ்ஞானிக ளஞ்ஞானிகளது பொய்யுலகாசாரத்தைக் கண்டு சிரக்கம்பனாதிகளுந் தமமுண்மையு மாநந்தானுபவமுங் கண்டு நடனாதிகளுஞ் செய்வரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

மாலயனு மிந்திரனும் வாழ்வதாய் மாளுவதாஞ்
சாலமயல் பார்த்துத் தலையசைப்பர் - ஞாலமயங்
குன்மத்தக் கோரணிபார்த் தோகோ வெனச்சிரிப்பார்
தன்னைப்பார்த் தாடுவார் தாந்தாம.

(இ-ள்.) மாலயனுமிந்திரனும் வாழ்வதாய்மாளுவதாஞ் சாலமயல பார்த்துத்தலையசைப்பர் ஞாலமயங் குன்மத்தக்கோரணிபார்த் தோகோவெனச்சிரிப்பர்,, எ-து. தேவர்கட்கெல்லா மேலாய மாலென்னும்பெயரை யுடையனாகியும, அயனென்னும பெயரை யுடையனாகியுமிந்திரனென்னும் பெயரை யுடையனாகியுஞ் சிறந்துள்ளார், தத்தமபதவிகளி லழிவின்றி வாழ்வதாய்க் கருதிக்கொண்டிருந்து பின்னரின் மாண்டுபோவதாகும். அவரது மிகுந்தவாணவமயக்கத்தைப்பார்த் திவ்வாணவ மவர்களையும் பொய்யாகிய தேகாதிகளையு மெய்யாக் கருதப்பண்ணி மயக்கிற்றுக் கண்டீர் கொலோவென் றுள்ளத்து நாடிச் சிரக்கம்பங்கொள்வர். அவ்வாணவத்தா னிவ்வுலகத்தார் மயங்காநின்ற பயித்தியக்கோரணிக் கூத்தைப்பார்த் தோகோவெனப் பிறர்க்குக் கேட்கச்சிரிப்பார் ?

"தன்னைப்பார்த்தாடுவர் தாந்தாம்" எ-து. அஃதன்றி தமமைப்பார்த்துத் தம்மைச் சிவபூரணம் விழுங்கிக்கோடலாற் காணாது தா மச்சிவபூரணந் தாமென நடனம்புரிவார். எ-று.

ப-ம். மாலயனிந்திரன் முதலியோ ரிறந்துபோவ தாகமப்பிரமாணத்தா லறிவதாகலி னவரது "மயல்பார்த்துத்தலையசைப்ப" ரென்றார். பித்தமேறினேன் றன்னுடைய தெரியா துலகர்நடைக்கு மாறுபா

டாய்த் திரிவதுபோ லாணவமேலீட்டாற் றம்மைத் தெரியாது ஞானி கணைட்டுகு மாறுபாடாய்த் தேகபோகங்களை விழைந்துகொண் டறு வகைத்தொழில்களி னுறுபேதமாய முயற்சிப்படலா "னுன்மத்தக் கோரணி" யென்றார். அவர்மருளான் மயங்கி நடிக்கின்றா. இவ ரருளாற்றெளிந்து நடிக்கின்றா ரென்பதுங்காணக. நாந்தா மென்ப தங் டந்திறக்கோர் தாளமு மாமெனக்கொள்க. (ருடு)

(கலி-ஙச-வு-கை.)

இதுவுமது.

ஆசைமுத லான வனைத்தும்போய் ஞானதுவாம்
வாசனையு மாண்டு மறந்தறியா - நேசத்
துறும்போக வுல்லாச வூமைக்கூத் தாடிக்
குறும்போக்கு வந்துநடப் பார்.

(இ-ள்.) ஆசைமுதலான வனைத்தும்போய் ஞானதுவாம் வாசனையு மாண்டுமறந்தறியா நேசத் துறும்போக வுல்லாச வூமைக்கூத்தாடி,, எ-து. ஐந்தவாமுதலிய கருவிகளனைத்து மிறந்து ஞானச்சிவத்தோ டத்துவிதமானே னென்பதாகிய வாசனையுமிறந்து தற்றரிசனந் திருவருட்டரிசனங்களி னின்றே ரோர்காலே யவற்றைமறந்து மீண்டு மறிவதுபோன் மறந் தறியாதநேயத்துத் தோன்றும் பரிபூரணானந்த போக வுல்லாசத்தோடு மவுனக்கூத்தாடி?

"குறும்போக்குவந்துநடப்பார்" எ-து. பின்னர்ச் ன்று மீண்டுவந்து முலாவுவா ரவ் வத்துவிதானந்தம்பெற்றோர். எ-று.

ப-ம். விடயங்களிற்செல்லு மைந்தவாவு நீங்கவே யவ்விடயங்களையறிந்துபற்றி யவற்றுளழுந் துவதாய விருவகை யிந்திரியங்களு மந்தக்கரணங்களுநீங்கும். இவைகணீங்கவே யொழிந்தகருவிகளுநீங்குமாகலி "னுசைமுதலானவனைத்தும்போயென்" றாசையைமுன்வைத்துக் கூறினார். நேயத்தழுந்தியபோது போதமிறத்தலின் "மறந்தறியாநேச" மென்றார். சிறுபிள்ளைகள்போ லுலாவி விளையாடுவராதலிற் "குறும் போக்கு வந்துநடப்பா" ரென்றார். (ருசு)

(கவி-டுள்-அ-ஙகை.)

கருவிகளும் போதமுமிறந்து ஞேயத்தழுந்தினோர்க்கு கருவிகளும் போதமுமுடையோராது மயக்கமுந்தமதுதெளிவு மெங்ஙனமறிவாரெனின், சீவன்முத்தராய மெய்ஞ்ஞானிகள் ஜகமுகமும் அகமுகமுந் தோன்றப் பற்றுது பார்த்தறிவாரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

கேடுஞ் சுகமு முதலெல்லாங் கீழ்ப்படுத்திக்
கூடுஞ் சுகம்போலக் கொள்ளாதே - நாடுநகும்
பூனைக்கண் ணேரி பொருப்பேறி போலுச்சிப்
பானுப்போ னீயவனைப் பார்.

(இ-ள்.) கேடுஞ்சுகமுமுதலெல்லாங்கீழ்ப்படுத்திக்கூடுஞ்சுகம்போலக்கொள்ளாதே" எ-து. துக்கமுஞ்சுகமு மிவற்றிற்கு முதலாயுள்ள தேகாதிப் பிரபஞ்சமெல்லாமுங் கீழ்ப்படுத்தி நீக்கி ஞேயத்தைக்கூடும் பரமுத்தர் குணம்போலச் சீவன் முத்தர்குணத்தை நீ கருதிக்கொள்ளாதே. அஃதெங்ஙனமெனின்?

"நாடுநகும்பூனைக்கண் ணேரிபொருப்பேறிபோலுச்சிப் பானுப்போனீயவனைப்பார்" எ-து. நாட்டின்கண்ணுள்ளார் பார்த்து நகையாநின்ற விருட்டைச் சிறிதேனுமின்றி யிரவினுமறியும் பூனையினது கண்ணைப்போலும் ஏரிகளைமே லேறினேனைப்போலு மலைமே லேறினேனைப்போலு மத்தியானத்துச் சூரியனைப்போலு நீ யச்சீவன்முத்தரறிவையும் பார்த்தறிதி. எ-று.

ப-ம். பூனைக்கண்ணிற் கிரவினும பகலினும் பொருள்கடோன்றுவ போலு மேரிகளைமே லேறிக் கிருபாலுந் தோற்றுவபோலும் பொருப்பேறிக்கு நிலத்திற்பொருளும பொருப்பிற் பொருளுந் தோற்றுமா போலு முச்சிப் பானுவிற் குருபமாகுந் தானமு மத்தமிக்குந் தானமுந் தோற்றுமாபோலவும், பிறப்பிற்றுன்பமும வீட்டி னின்பமுமவர்க்குத் தோற்றுமாகவி யரிங்ஙனமுவமைகூறினர்.

இருளானறியுங்கண்ணிற் கொளியிற் பொருடோற்றா ததுபோற் பெத்தர்களென்பதும், ஒளிபானறியுங்கணணிற் கிருளிற்பொருடோற்றாததுபோற் பரமுத்தரென்பதும். இருளினு மொளியினு மறியுங் கண்ணைப்போற் சீவன்முத்தரென்பதும், "பூனைக்கண்" ணென்னு முவமைக்குறிப்பாற்கா ண்க.

பரமுத்தர், தநுவாதிகளைநீக்கி நேயத்தழுந்தினோர். சீவன்முத்தர், தநுபாதிகளோடு கூடியுங்கூடாமனின்று நேயத்தழுந்தினோர். ஆகலி னிச்சீவன்முத்தராவா ரிவரென் றிதனுட் பகுத்தறிவித்தார். ஏரியென்பதனைக், கரைமேலேறியென்பதனோடுங்கூட்டுக. "நாடுசகு"மென்பது பூனைக்கண்ணிற்கடை. (௯௭)

(கலி-௯௮-௮-கை.)

ஞானிகளாயினோர் மவுனமாயிருப்பதன்றி யிவராடலாதிகளைச்செய்வதென்னையென்று சரிதாதியி னிற்போர் சொல்லார்களோவெனின், மெய்ஞ்ஞானிகளது ஆடலாதிகளைக்கண்டு கருமிகள் பழிப்பினுமது புழிப்பின்பாற்பட்ட தன்றென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

> சூலையுமப் பேயும் பிடித்துழலவார் சும்மாநம்
> போலறிவி ரென்றுரைத்த புத்திபோல் - மூல
> விருளான் மறந்தறிவா ரீதென்றூ னென்பா
> ரருளா லறிந்தறிவா ரை.

(இ-ள்.) சூலையும்பேயும் பிடித்துழல்வார் சும்மாநம் போலறிவிரென்றுரைத்தபுத்திபோல், எ-து. பொதுமாதர் கூட்டரவான்வருஞ் சூலைநோயு நற்குணத்தை மாறுபடுத்தும் பேயுமபிடித் தவற்றான்வருந்திச் சுழல்வா ரிச்சூலையும் பேயுங்கொண்டு சும்மா வெமதறிவைப்போ னீருமறிவிரென்று நற்குணத்தோர்க்குச் சொன்னபுத்திபோல?

"மூலவிருளான்மறந்தறிவா ரீதென்றூனென்பா ரருளாலறிந்தறிவாரை" எ-து. மூலமலவிருளாற் றம்மைமறந்து மாயா காரியமாகியதநுவாதிகளை யானெனதென்றறிவா ரருளாலத்தநுவாதிகளைப் பொய்யென்றறிந்து நீங்கித் தம்மையுந் தமக்குரிய பேரின்பத்தையு மறிந்துளாரைப்பார்த்துப்பித்தரைப்போ னீர்செய்யு மாடல்பாடல்களிதென்னையென் றிசைப்பர். அதுகொண் டிவர்க்கோரிகழ்ச்சியுமின்று.எ-று.

ப-ம். சூலையும் பேயும்பிடித்துளோர் புத்தியை யவை பிடியாத நற்குணத்தோர் கேளாததுபோற் சகலகேவலத்தி னிற்போர் சொற்களை யவற்றைநீங்கிச் சுத்தத்திருப்போர் கேளாரென்ப திவ்வுவமையானறிக.

சூலையும் பேயுமென்றது, பகதாரவிரதியா யிலிங்கவிரதியா யிருப்போர்க்குப் பொதுமாதர் கூட்டரவு மைவராசர்முதலிய மருளோற்றிக் கொள்ளாது பன்றெனறு பிறர் கூறுவனபோ லென்பதுமாம். (௯௮)

(கவி-மிகூ-அ-கை.)

ஞானிகள்மகிமையை யுலகத்தாருஞ் சரிதாதிகளினிற்போருமறி யாதிருத்த லேனெனின், ஞானிகளது மகிமையை யுலகத்தாருஞ் சரி தாதிகளி னிற்போரு மெய்யுணர்ச்சி யின்மையா னறியார்களென் றித் திருவெண்பாவிற் கூறுகின்றார்.

மருண்மூகர் வாக்கறிய வல்லரோ மாயா
விருளே யொளியா யிருப்ப - ரருளுருத்த
பேயனைப்பே யென்றரோ பித்தநாப் பாலிருட்கண்
பார்வைக்குப் பானுப் பகை.

(இ-ள்.) மருண்மூகர்வாக்கறிய வல்லரோமாயா விருளேயொளியா யிருப்பர்,, எ-து. பித்தமேறிய வூமர்க ணல்லறிவாளர் கூறு மறநெறி வாக்கினை யுட்கொண்டறியவல்லரோ? அதுபோ லுலகத்தார் ஞானி கள்கூறுந் திருவாக்காணுயினு மவர்களைஞானிகளென் றறியவல்லரோ? அஃதன்றித் தீங்கற்ற நூலறிவுஞ் சரிதாதிகளுமாகிய மாயாவிருளைத் தானே ஞானப்பிரகாசமாகக் கருதிக்கொண்டிருப்போர்?

"அருளுருத்தபேயனைப்பேயென்றரோ பித்தநாப்பாலிருட்கண் பார்வைக்குப்பானுப்பகை" எ-து. மும்மலங்களையுந் தற்போதத்தை யுங் கோபித்தவருளாகிய பூரணப்பேய் பிடித்தபேயனைப் பேயரென்று சொல்லார்களோ? அங்ஙன மிருந்தோ ரிங்ஙன மிருந்தோரைப் பேய ரென் றிகழ்வானேனெனின், மதுரமாகியபால் பித்தமேறிய நாவிற்கு ப் பகையானதுபோலும், பேரொளிப் பிரகாசமாயிருந்த பானு விரு ளையொளிவாகக் காணு மிருட்கண்பார்வைக்குப் பகையானதுபோலு மானந்தமுந் திருவருளு மலமேலீட்டா லவர்க்குப்பகையாமாகலி னி வற்றைப்பெற்ற ஞானிகளும் பகையாத் தோற்றுவ ரிஃதே யவரிகழ் தற்குக் காரணமென் றறிக. எ-று

ப-ம். "மருண்மூகர்வாக்கறியவல்லரோ" வென்ற துலகத்தார்க் குவமை நூலுணர்ச்சியோடுஞ் சரிதாதிகளி னிற்போ ரிகழ்வாரென்ப து, பரஞானமின்மையா லெனக்கொள்க.

"பானுப்பகை" யென்பதனைப் பாற்பகை யென்றதனோடுங்கூட் டுதற்கைப்பாயுமிருளாயுமாறுபடத்தோற்றலிற் "பகை" யென்றார். ()

(கலி-உ௰-அ-கை.)

ஞானிகன்மகிமையை மானிடரறியாராயின் அறிவாராரெனின், ஞானிகன் மகிமையை மானிடர்களறியாரெனினுந் தேவர்களறிந் தேவல்புரிவாரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அடைப்புள்ளா யாளடர்ந்த வாமையாய்த் திக்கே
யுடைப்பதா யோர்ந்துழல்வார்க் கூரார் - நடைப்பிணமே
யூமைப்பே யாரெனினு மோலமிடுந் தேவர்குழாஞ்
சேமக்கோ லாளிந் திரர்.

(இ-ள்.) அடைப்புள்ளாயாளடர்ந்த வாமையாய்த்திக்கே யுடைப்பதா யோர்ந்துழல்வார்க்கூரார்,, எ-து. செயநிட்டை மாறுதிருத்தலின் முட்டைகளைவைத் தவையங்காக்கு மடைப்புட்போலாய்த் தாமிருந்த விடந்தேடிச் சில ரன்னாதிகளைக் கொடுவந்து நேரேவைத்துவணங்கியுபசாரங்களைக் கூறினு மிந்தியங்களைந்தையு மவற்றிற் செல்லவொட்டாதுள்ளடக்கிக்கொண்டிருத்தலினாளடர்ந்த வாமைபோலா யிவ்வுடையைத் துறந்து திக்கெல்லாம் பரிபூரணமாயுள்ள வுடையைத் தம்மைத்தெரியாது சூழவுடுத்திக்கொண்டிருத்தலிற் றிக்கை யுடைப்பதாயிங்ஙனந் தேர்ந்துலாவுவார்க் கூரின்கண்ணுள்ளார் நன்றுகூறினுந் தீதுகூறினு முறவரோ பகைவரோ விவர்யாவர்?

"நடைப்பிணமே யூமைப்பேயாரெனினு மோலமிடுந்தேவர்குழாஞ் சேமக்கோலாளிந்திரர்" எ-து. அஃதன்றி நடையாடிய பிணம்போற்றிரிந்தாரெனினு மூமைப்பேயனைப்போ லிருந்தாரெனினு மவரதுமான்மியத்தைத் தேவர்கூட்டங்களெல்லாமறிந்து சூழ்ந்துகொண்டுதோத்திரம்பண்ணுஞ்சிறப ரிந்திரர்க ளவர்க்கேவற்பணிவிடைசெய்யுஞ் சேமக்கோலாள்களாய்த்திரிவர். எ-று.

ப-ம். அடைப்புண்முட்டையைச் செட்டையா லடக்கிக் கோடல்போ லண்டங்களையெல்லாந் தமது பூரணத்தின் மறைத்துக்கொண்டிருப்ப ரென்பதுமாம். ஆளடர்ந்தபோதாமை யைந்துறுப்பையு மடக்கிக்கோடல்போல, விடயங்க ணேர்படி னவனைந்தையு மடக்கலி னிங்ஙன முவமைகூறினார்.

உளரென்பது ஊரின்கண்ணுள்ளார்மேலேறிற்று. தேர்ந்துழல்வார்க்,கூறினுள்ளா ரியாவரெனக்கூட்டுக. கருவிச்சேட்டைக ளின்று

நிற்றலி "னடைப்பிண" யென்றும, மவுனனந்தமா யிருத்தலி னூமைப் பேயரென்றும், ஒன்றினு மவாவற்ற மெய்ஞ்ஞானிதேவருலகத்து மி ன்மையா "லோலமிடுந் தேவர்குழா" மெனறுஞ் "சேமக்கோலாவிந் திர" ரென்றுங்கூறினா.

அந்தஞானிகட்கேவல்செய்வது மிகவுஞ் சிறப்பாகலி னவர்பிடி க்குங்கோலைச் "சோமக்கோ" லென்றார். உபேந்திரருளரர்களி னிந்தி ரரென்று பண்மையாகக்கூறினார். (உயி)

(கவி-உக-அ-கை.)

இங்ஙனமகிமையுடைய ஞானிக ளெத்தேசத்திற்செல்வ ரெவ்வி டத்திருப்பரெனின், ஞானிகள் செலவதற்கு மிருப்பதற்குந் தேசமு மிடமுங் குறியீ டின்றென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றா.

செத்தவரைப் போலத் திரும்பாமற் போகலுமா
மெத்திசையு மொன்றென் றிருக்கலுமா - முத்தர்தமக்
கண்ட மணுச்சிற்றி லாடரங்கர தேகமலாற்
கண்டிடுகைக் கேதுமிலை காண.

(இ-ள்.) செத்தவரைப்போலத் திரும்பாமற்போகலுமா மெத்திசை யுமொன்றென்றிருக்கலுமா முத்தாதமக்கு,, எ-து. முத்தர்தமக்குச் செத்தவரைப்போலத் தாமிருந்து நீங்கிய பதியின் மீட்டுந்திரும்பாமற் சேறலுமாகு மஃதன்றி யெல்லாம பரிபூரணமாய் தோற்றலி னெமக் கெல்லாத்திக்கு மொன்றுதானேயென் றோரிடத்திருத்தலுமாகும்?

"அண்டமணுச்சிற்றி லாடரங்கந்தேகமலாற் கண்டிடுகைக்கேது மிலைகாண்" எ-து. அஃதன்றித் தேகங்க ளான்மாக்கட்குச் சிற்றி லி ழைத்தற் கிடமெனவு மண்ட மவ் வான்மாக்கட்கு மாயா கோர்ணிக் கூத்தாடற் கோ ராடரங்கெனவுங் காண்பதல்லாம லம்முத்தர் தமக் கு வேறுகாண்கைக் கியாதொரு பொருளுமில்லை. எ-று.

ப-ம். உடற்கண்ணிருந்து நீங்கிய வுயிர் மீட்டும்வந் ததனுட் புகா ததுபோற் றாமிருந்துநீங்கிய பதியின் மீட்டும்வந்து புகாமையிற் "செ த்தவரைப்போலத் திரும்பாமற்போகலுமா" மென்றார்.

அணுவென்பது-ஆன்மா. தேகஞ் சிற்றிலெனவு மண்டமாடரங் கெனவு மூறிக்கூட்டுக. பிரபஞ்சமெல்லா மண்டபிண்டங்களு ளடங் குமாதலிற் "கண்டிடுகைக்கேதுமிலைகா" ணென்றார்.

முத்தர்தமக்கென்பது நடுவின் றிருபாலுங்கொண்டு முடிதலிற் றுப்பிச்சைப்பொருள்கோளு நடுநிலைத்தீபகமுமாங்காண்க. (உ௬)

(கலி-உ௨-.அ-கை.)

அந்தஞானிகள் போகாதவூர் ஒன்று மின்றேவெனின், ஞானிக ட்கு நிற்குநிலையு நடக்கும்போ துள்ளகுணமு மோரூர் நிற்கை யோ ரூர் தவிர்கையுமாகிய நியதியின்றென்பது மித்திருவெண்பாவிற் கூறு கின்றார்.

உடற்போகம் போக வுயிர்ப்பகைபோய்ப் பேறுங்
கெடத்தானுந் தன்னறிவுங் கெட்டோர் - நடக்கும்போ
தாகாயஞ் சாணிடல்போ லாவதல்லாற் பூரணர்க்குப்
போகாவூ ருண்டோ புகல்.

(இ-ள்.) உடற்போகம்போக வுயிர்ப்பகைபோய்ப்பேறுங் கெடத்தா னுந்தன்னறிவுங் கெட்டோர்,, எ-து. உடம்பா னனுபவிக்கும் விடய போகம் போக வப்போகமாகிய துன்பத்தை யின்பம்போன் மாறுபா டாய்த் தோற்றுவிக்கு முயிர்ப்பகையாகிய வாணவம்போய்ப் பேரின்ப த்தைப் பெற்றேமென்னும் பேறும்போகத் தன்னையுந் தனக்கறிவிப்ப தாய வருளையு மிழந்துளோர் ?

"நடக்கும்போதாகாயஞ்சாணிடல்போலாவதல்லாற் பூரணர்க்கு ப்போகாவூருண்டோ புகல்" எ-து. ஓர்திசையிற் செல்லும்போ தா காயத்தைச் சாணிட் டளப்பதுபோ லப்பரிபூரணர்க்குத் தமது பூரண த்திற் றுஞ்செல்வதுபோற் றோற்றுமல்லாம லிதுதீதென்று பகுத்துப் பார்த்துப் போகாததவிரு மூருமுண்டோ நீபுகலுதி. எ-று.

ப-ம். ஆணவத்தா லின்பமாய்த்தோன்றிய போகந் துன்பமாய்த் தோன்றியபோ தவ்வாணவங்கெடு மவ்வாணவங் கெடவே தற்றரிசன முந் திருவருட் டரிசனமும் பரையோகமு மானந்தப்பேறுமுண்டாம். ஆனந்தப் பேறிழந்தவிடத்துத் தானுந் தனக்கறிவித்த வருளு மின்று மாகலி னுண்டாமவைக்கு மின்றாமிவைக்குங் காரண மிவையென் று டற்போக விழப்பையு முயிர்ப்போக விழப்பையு மெடுத்தறிவித்தார்.'

ஆகாயத்தைச் சாணிட் டளக்கும்போ தளப்பதுபோற் றோன்றி விடுத்தபோ தளந்தது மின்றாய்விடுத்தது மின்றாயிருத்தல்போற், பூர ... கணுடைப்பதுபோற் றோ

ன்றி யோர்தானத் திருந்தவிடத்து முன்னடக்தோமென்பது மிப்போ திருந்தோமென்பதுந் தோன்றாதாகவி "ஞாகாயஞ்சாணிடல்போ" லெ ன்றுவமை கூறினர். (உஉ)

(கவி-உ௩-அ-கை.)

ஆயினவர்க்கு நற்றானமுந் திதாயதானமுஞ் சரியோவெனின், ஞானிகட்கு எவ்விடமுஞ் சமனென் றித்திருவெண்பாவிற் கூறுகின் றார்.

தருவனமென் றண்டுறைட சாய்மரையாய் வாழு
நரவணமென் மேல்கீழ் நடுவென் - பரமசிவன்
றாக்கற் றதுபோ லருள்சிவனைச் சாராபோற்
றாக்கற்றார்க் கெங்குஞ் சமன்.

(இ-ள்.) தருவனமென்றண்டுகுடை சாய்மரையாய்வாழு நரவண மென்மேல்கீழ்நடுவென்,, எ-து. தருக்கனெருங்கிய சோலையாயினெ ன்னே, முட்செறிந்த வனமாயினென்னே, சிவிகை கவிகை சாய்மரை முதலியன வுடையராய் வாழு நராகிய வடவியாயினென்னே, யுத்தம மத்திம வதமமாயுள்ள தலங்களாயினென்னே ?

"பரமசிவன் றாக்கற்றதுபோ லருள்சிவனைச்சாராபோற் றாக்கற் றார்க்கெங்குஞ்சமன்" எ-து, பரமசிவ னெல்லாவற்றோடுங் கூடியிருந் து மவற்றுட் டாக்கற் றிருந்ததுபோலும் திருவருளானது கிருத்தியங் களோர்து தன்னுனடக்கவுஞ் சிவத்தைவிட்டு நீங்காதிருப்பதே யன்றி யிக்கிருத்தியங்க ளோர்தையு மொழித் தச்சிவத்தைச் சார்வோமென்று சாராதவாறுபோலு மொன்றோடுந் தாக்கற்றஞானிகட்கு முற்கூறிய விடமெல்லாஞ் சரியாம். எ-று.

ப-ம். கருவிகளெல்லாவற்றோடுங் கூடியிருந்து மவற்றுட் டாக்க ற்று நிற்றலாற் "பரமசிவன்" றாக்கற்றதுபோலென்றும், தேகவிந்திய வந்தக்கரணங்க டம்மாற் றொழிற்படினுந் தாஞ்சிவத்தைவிட்டு நீங்கா திருப்பதேயன்றி யித்தேகவிந்தியாதிகளினது தொழில்களையொழித் த ச்சிவத்தை யடைவோமென்றதின்றிப் பரிபூரணமாயிருத்தலி "னருள் சிவனைச் சாராபோ" லென்றுங்கூறினர். (உ௩)

(கவி-உ௪-அ-கை.)

ஆயினவர்கட்கு இடந்தான் யாதெனின், ஞானிகட்குப் போதமி ருந்திருக்குமிடமே கருத்தன்றி மற்றொன்றுமின்றென் றித்திருவெண் பாவிற் கூறுகின்றார்.

தன்னையரு ளாலறிந்து தானறிந்த தெல்லாம்போ
யிம்மைப் பெருவாழ்வை யெய்தினர்க்கு - முன்னே
நடந்தறிந்த போத நசிப்பே யிருக்கு
மிடம்புறங்கா டென்ப திலை.

(இ-ள்.) "தன்னையருளாலறிந்து தானறிந்ததெல்லாம்போ யிம்மைப் பெருவாழ்வையெய்தினர்க்கு" எ-து. கருவிகண் முப்பத்தாறையுங் கடந்து தம்மையருளாலறிந்து தங்களைத் தம்மை யறிந்தபின்னர்த் தம்மை யறிவித்த வருட்டரிசனமுதலாய்த் தாமறிந்தவையெல்லா நீங்கி யிம்மைக்கண்ணே சுகாதீதயாகிய பெருவாழ்வை யடைந்தோர்க்கு?

"முன்னேநடந்தறிந்த போதநசிப்பேயிருக்கு மிடம்புறங்கா டென்பதிலை" எ-து. கருவிகளையுந் தற்றரிசனமுதலியவற்றையு மிதுவிது வென் றறிந் தவற்றை நீங்கிச்சென்று சிவத்தையறிந் ததனுள்ளிறந்த போத மீண்டெழா ததனைக் கெடுப்பதே யிருக்குமிடமன்றி யிதுசுத்த மாகிய விடமென்பது மிது புறங்காடென்பதுமின்று. எ-று.

ப-ம். தற்றரிசன முதலியவற்று ளுறுதியாய் நின்றோர் மறுமைக் கண்ணடையுஞ் சுகாதீதமுத்தியை யிவரிம்மைக்கண்ணே யடைந்தா ராகலி "னிம்மைப்பெருவாழ்வையெய்தின" ரென்றார். எல்லாவற்றை யுநீங்கிச்சென்றமையா "னடந்" தென்றார். (உ௪)

(கலி-உ௫-அ-கை.)

இங்ஙனமிருந்த ஞானிகட்குச் சாதினடை சமையனடை யின் றோவெனின், ஞானிகணடை சாதிசமயங்களோ டொவ்வாதென் றித் திருவெண்பாவிற் கூறுகின்றார்.

காமாதி விட்டுக் கரமே கலமாகிப்
பூமீதே கைகாலைப் போர்த்துறங்கி - நாமகுணஞ்
சாதி கருமமெனும் வாதனையிற் றாக்கற்றார்க்
கேது சமையமென லாம்.

(இ-ள்.) "காமாதிவிட்டுக்கரமேகலமாகிப் பூமீதேகைகாலைப்போர்த் துறங்கி" எ-து. காமக்குரோத லோபமோகமத மாச்சரியங்களையெல் லாம்விட்டு நீங்கிக் கரமே யுண்கலனாகி மனைதோறும் பிச்சையேற்று

ண்டு பொதுச்சாவடி புறந்திண்ணை பாழுங் கோவின் முதலியவற்றுட் பூமியாகிய மலரணைமீது கரங்களையுந் தாள்களையும் போர்வையாகப் போர்த்துக்கொண் டானந்த நித்திரைபண்ணி ?

"நாமகுணஞ் சாதிகருமமெனும்வாதனையிற் றாக்கற்றார்க்கே து சமையமெனலாம்" எ-து. பெயாகுணஞ் சாதி கிரியையென்னு மிவற் றின் வாசனையோடுந் தாக்கற்ற மெய்ஞ்ஞானிகட்குச் சாதியாதென் றுகூறலாஞ் சமைய மியாதென்றுகூறலா மாகலி னிவற்றினடைகளு மவர்க்கின்று. எ-று.

ப-ம். காமாதி விட்டென்றமையான் மாயாகுணமொன்று மில ரென்பதாயிற்று. நாமாதிகளிற் றாக்கற்றாரென்றுதவற்றின் வாசனையி ற் றாக்கற்றா ரென்றமையா னவற்றை மறந்துபோயினா ரென்பதாயி ற்று.

"சாதிகரும" மென்றமையாற் சாதி யேதெனலாமென்பது வரு விக்கப்பட்டது. (௨௫)

(கவி-உ௬-அ-கை.)

ஞானிநடை சாதிநடை சமையநடைகளோ டொவ்வா திங்ஙன மிருப்ப தென்னையெனின், ஞானி மாயாதீதமான சிவஞானமுடைய னாகலிற் சாதிசமயநடையாகிய மாயைக் குட்படானென் றித்திருவெ ண்பாவிற் கூறுகின்றார்.

ஞானிக் குலக நடையென்று நாம்பார்க்கிற்
சீனக்கண் ணாடியொடு தீபமுமா - மேனோர்க்கும்
விப்பிரட்ட மேபோல வேறாம் விகாரியோ
வப்பராக் கன்றிபறி யான்.

(இ-ள்.) ஞானிக்குலக நடையென்றுநாம்பார்க்கிற் சீனக்கண்ணாடி யொடுதீபமுமாம்,, எ-து. ஞானியினதுநடையை யுலகரதுசாதி நடை போலென் றியாம்பார்ப்போமெனி னவனதுநடை யிருளிற் றீபத்தை க்கொண்டு பொருள்காண்பதுபோலுமாம். இவரதுநடை யவ்விருளிற் சீனக்கண்ணாடிகொண்டு பொருள்காண்பதுபோலுமா மாகலி னிவர து நடையோ டவனதுநடை யொவ்வாதானாற் சமையிக ணடையோ டொவ்வாதிருப்ப தெங்ஙனமெனின் ?

"ஏனோர்க்கும்விப்பிரட்டமேபோலவேறாம்விகாரியோ வப்பராக் கன்றிபறியான்" எ-து. சமையிக டத்தங்கடவுளரைத்தமக்குரிய நூல்

கூறியவாறே வழிபடுவார். அவனக்கடவுளாமெல்லாங் கடந்துநின்ற பரிபூரண சிவத்தையடைந்தவனாகலி னச்சமையிகணடைக்கு மவன டை சுத்தப்பிரட்டமேபோல வொவ்வாதுவேறா மிங்ஙனஞ்சாதிநடை சமையநடை யொவ்வா தாயி னிவ்விருவகை நடையுமில்லாத பாமரர்போலு மவன் விகாரியோவெனின், அவன் சிவனைப்போலு நிருவிகாரி யவ னிருவிகாரியேயாகுல் விகாரமற் றிருத்தீவேண்டுமேயன்றிக் கரபிச்சைவாங்கி யுண்டன்முதலிய நடை நிகழ்வானேனெனின், அங்ஙனங் காயத்தி னிகழ்ந்ததாயினு மவ னிருவிகாரமாகிய பராக்கேயன்றி யிவ்விகாரமாகிய பராக்கினு ளொன்றினையுமறியான். எ-று.

ப-ம். உலகநடையென்றதனுல், ஞானிநடைவருவிக்கப்பட்டது. ஞானிநடை தீபம்போலெனவு, முலகநடை சீனக்கண்ணுடிபோலெனவுமாறிப் பொருள்கொள்க.

இருளிற்றீபத்தாற் பொய்ப்பொரு டோன்றுவனபோன், ஞானதீபநடையான் மெய்ப்பொரு டோற்றுமென்பது மவ் விருளிற் சீனக்கண்ணுடியாற் பொய்ப்பொருள் சிறிதுந் தோற்றுததுபோன், மாயாந்தகாரத்தோடுஞ் செய்யுஞ் சாதிநடையான் மெய்ப்பொருட்சிறிதுந்தோற்றுதென்பது மிவ்வுவமைகளாற் காண்க.

"விகாரியோ" வென்றமையானு "மப்பராக்கன்றியறியா" னென்றமையானு மவற்றிற்கிடையில் வேண்டுவனவருவிக்கப்பட்டது.(உகூ)

(கலி-உஎ-அ-கை.)

ஞானியினதுநடைமுதலியவற்றை யறியக்கூடாதோ வெனின், ஞானியினது நடையுந் தெளிவும் யாவராலுமறிந் தளவிடக்கூடாதென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

மூர்க்க னநுசாரி மூடனெனப் பண்டிதனு
மேற்குலமா மாசார வித்தநெனப் - பார்க்கி
லளவைக் களவாகி யப்பலா ஞானி
தெளிவைத் தெளியாத தென்.

(இ-ள்.) மூர்க்கனநுசாரிமூடனெனப்பண்டிதனு மேற்குலமாமாசாரவித்தநென,, எ-து. உலகநடை சமயநடைகளினிற்போர் ஞானிநடையைப்பார்த்துத் தமதுநடையோ டொவ்வாமையா னிவன்பிரட்டுநடையையுடைய மூர்க்கனெனவு மாசார வீனனெனவு மொன்று மறியாத மூடனெனவுங் கூற விவேகிகளாயினு மவ னடையைப்பார்த்

தெல்லாவற்றையுந்தெளிந்த பண்டிதனுமெனவு மேலாய ஞானி குல மாமெனவு மாசாரத்திற் கெல்லா மோர்வித்தாமெனவுங் கூ

"பர்க்கிலளவைக்களவாகியப்பாலாஞானி தெளிவைத்தெளியா ததென்" எ-து அவனுடைய விசாரிக்குமிடத் திவராலிவ்வளவென் றளவிடுதற் களவிடுவோரா யிவ்வளவையுங்கடந் தப்பாலுமாகிய வந்தஞா னியினது நடையினையுந் தெளிவினையு மிவ்வளவென் றொருவராலு ம றியக்கூடாதிருந்த தென்கொலோ. எ-று.

க-ம். உலகநூல் சமையநூல்களை யுணர்ந்தோர்க ளந்நூல்களி னடையின்மையா னிகழ்ந்துகூறினர். ஞானநூ லுணர்ந்தோர் ஞான நடையென்றறிந்து புகழ்ந்துகூறினாராகலி "னளவைக்களவாகி" யெ ன்று மிங்ஙனஞ் செய்வோமென்று செப்பாதவனிடத்தின் ஞானநடை யியல்பாய் நிகழ்தலின் ஞான நூலுணர்ச்சியாற் புகழ்ந்துகூறினர். அ ளவையுங்கடந்து நின்றுணைகலி னிமமூவளவைக்கும்பொதுப்பட "வப் பாலாஞானி தெளிவைத் தெளியாத" தென்னென்றுங் கூறினர். ()

(கவி-உஅ-அ-கை.)

சுகாதீதத்தி னிற்போர்க் நடைக ளிலவாயினு மருட்டரிசன முதலியவற்றி னிற்போர்க் கந்நடைக ளிலவாயி னது பிரட்டன்றோ வெனின், திருவருண்மேலிட்டவிடத்து வருமநுபவமு மதனையுடை யோருமெ ஞானிகளென்பது மவரது நடையை மாயையுடையோ ரறி யாரென்பது மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அஞ்சனக்கண் ணுளர்க் கருநிதியந் தோன்றுவபோ
லஞ்சலகை மாற்றியதி னுணுவர்போல் - வெஞ்சாப
விடுபோற் றோன்றுமருண் மேலிட்டால் விப்பிரட்டா
மோடையின்மண் டேமொப்போர்க் கு.

(இ-ள்.) அஞ்சனக்கண் ணுளர்க்கருநிதியந்தோன்றுவபோ லஞ்சல கைமாற்றியதினு ணுவர்போல் வெஞ்சாபவீடுபோற்றோன்று மருண்மே லிட்டால்" எ-து. பாதாள வஞ்சனம்போட்டப்பார்க்குங் கண்ணினையு டையார்க் கரியசேமநிதி தோன்றுவபோலுந் தம்மேலேறியிருந்தவிட த்தையும் பேயையுமாற்றி னதனாற் றெளிவுபிறந்து முன்னரென் செய் து கொண்டோமென் றவற்றான் மயங்கிச்செய்த செயல்களைநாடி நா

னுவர் ளைப்போலுங் கொடியசாபத்தினலே வருந்தினேர்க்குச்சாபம் விடுதலையானாற்போலுந் தோன்றுந் திருவருண் மேலிட்டகாலத்து?

"விப்பிரட்டாமோடையின்மண்டுக மொப்போர்க்கு" எ-து. அத்திருவருண் மேலீட்டைப்பெற்ற ஞானிகடை யோடையின் மூழ்கிக்கிடக்குந் தவளைபோன் மாயாசமுத்திரத்தின் மூழ்கிக்கிடப்போர்க்குப் பிரட்டுகடைபோற் றோன்றும். எ-று.

ப-ம. மண்மறைப்பாற் றெரியா திருந்தகதி யஞ்சனையபோட்டுப்பார்த்த கண்ணுளர்க் கம்மண்ணூடுருவி யந்நிதிதோன்றுவபோல், மலமறைப்பாற் றெரியா திருந்தவருளவ்வருட் கண்ணாற் பார்த்தபோ தம்மலமறைப்புநீங்கி யவ்வருளெங்குந்தானாய்த் தோற்றுமாகலி "னஞ்சனக்கண்ணுளர்க் கருநிதியந்தோன்றுவபோ லென்றும், விடமும் பேயும் நீங்கியவிடத்துத் தெளிவுவந்து முன்னரவற்றான்மயங்கிச்செய்த செயல்களை நாடி நாணுவாரைப்போலச் சகலகேவலங்களை நீங்கி யருளைக்கண்டவிடத்து முன்னரவற்றான் மயங்கிச்செய்த செயல்களை நாடி நாணமவருமாகலி "னஞ்சலகைமாற்றிய தினுனுவர்போ" லென்றும், தேவனாயிருந்துளான் சாபத்தால் விலங்காதிகளாயிருந்து பின்னரச்சாபம் விடுதலையானபோது தேவத்துவத்தையடைந்தாற்போல அளவிறந்தகால மலதேகந் தானாயிருந்தவ ரிப்போ ததேகநீங்கித் தன்னையறிவென் றுள்ளபடி யறிந்தமையால் "வெஞ்சாபவிடுபோ" லென்றுங் கூறினர்.

"ஓடையின்மண்டுகமொப்போர்க்" கென்றது, கிணற்றுக்குட்டவளை நாட்டுவளப்பமறியுமோ வென்னு முலகவழக்கக்குறிப்பான் மாயையின் மூழ்கிக் கிடப்போர்க்கு ஞானிகடை தெரியுமோவென் றறிவித்தது. (உஅ)

(கவி-உகூ-அ-கை.)

நீ ரிண்டு கூறியவாறே துறவு ஞானநட்டையு முடையோரை ஞானிகளென்பதன்றி யிவை யில்லாரையு ஞானிகளென்பதென்னையெனின், துறந்துள ஞானிகளது வாக்குக்காயங்களி னிகழு ஞானிநடைக்கவ ரதீதமா யிருந்ததுபோ லிங்ஙனங் குடும்பசகிதராயிருந்த ஞானிகளது வாக்குக்காயங்களி னிகழுமுலகநடைக்கு மிவ ரதீதமா யிருப்பரென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அவரவனைப் போலிருப்பர் தாமவரா கார்போ
லிவரவர்க்கொப் பில்லை யெனினு - முவமைசொலின்
வேசிபணம் வெய்யோன் வீணை வெளிவிசிறி
யாசியர்போ லென்கினுமா வார்.

(இ-ள்.) அவரவனைப்போலிருப்பர் தாமவராகார்போ லிவரவர்க் கொப்பில்லையெனினு முவமைசொலின்,, எ-து. குடும்பத்தோடு கூடியிருந்தும் ஞானிகளாயிருப்போ ரறிவினு லக்குடும்பநிவிர்த்தியாயிருந்த ஞானிகளைப்போலேயிருப்பர். இக்குடும்பத்தோடு மிருந்த ஞானிகடாம் நடையினு லக்குடும்ப நிவிர்த்தியாயிருந்த ஞானிகளைப்போலா கா ரதுபோல விந்தக்குடும்பிக ளந்தக்குடும்பத்தோடு மிருந்த ஞானிகளுக்கு நடையினுலொப்ப ரறிவினு லிந்தக்குடும்பிக ளந்தக்குடும்பத்தோடு மிருந்த ஞானிகட்கொப்பிலரெனினு மின்னுமந்த ஞானிகட்குவமைகூறுமிடத்து?

"வேசிபணம்வெய்யோன்வீணைவெளிவிசிறி யாசியர்போலென்கினுமாவார்" எ-து. வேசிபோலென்று கூறினும் பணம்போலென்றுகூறினும் வெய்யோன்போலென்று கூறினும் வீணைபோலென்றுகூறினும் வெளிபோலென்று கூறினும் விசிறிபோலென்று கூறினும் யாசிப்பார்போலென்று கூறினுஞ் சரியாவார். எ-று.

ப-ம். வேசி தன்மேனசைகொண்டுவந்தார்மேற் றானுமவர்மேனசைகொண்டாள்போலும் வாக்குக்காயங்களிற் காட்டி மனத்தினவர்மேனசையின்றிப் பொருண்மேனசைகொண் டிருப்பதுபோன், மனைவிமுதலிய குடும்பத்தார் தம்மேனசையுற் றிருப்பத் தாமு மவர்மேனசையுற்றார்போலும் வாக்குக் காயங்களிற்காட்டி மனத்தினவர்மேனசையின்றி மெய்ப்பொருண்மேனசையுற் றிருத்தலின், வேசியென்றும், பண மெவரெவ ரெமதெமதென் றபிமானிப்பினுந் தனக்கவர்மே லபிமான மற்றிருத்தல்போல் சுற்றத்தார் நட்பு முதலியோரெம்மவ ரெம்மவரென் றபிமானிப்பினுந் தாமவர்மே லபிமானமற்று?

நிர்விகாரிகளா யிருத்தலிற் பணமென்றும், வெய்யோனு லுலகத்தார் தொழிற்படினு மிவர்செய்யு நன்றுதீது அவனுக்கின்றாயதுபோற் றம்மது வாக்குக்காயங்களி லியாது நிகழினு மிவற்றான்வருந் தீதாகிதங்

களிற்றுஞ் சாராதிருத்தலின் வெய்யோனென்றும், வீணை வாசியாதிருந்தபோதும் வாசித்து விடுத்தபோதுஞ் சும்மாவிருந்து வாசிக்கும்போ தன்பாடும் பாட்டின்படி தான் சொல்வதேயன்றி மற்றொன்றுஞ் சொல்லா தொழிதல்போ லொருவ ரோர்காரியம்வந்து பேசாமுன்னரும் பேசி யொழிந்தபின்னருந் தா மோர் காரியவிசாரணை பண்ணாது சும்மாயிருந்து காரியக்காரர்வந்து பேசும்போ தவர்பேசுங்காரியப்பேச்சுமாத்திரம் பேசி மற்றொன்றுஞ் சொல்லா தொழிதலின் வீணையென்றும், வெளியெல்லாவற்றிற்கு மிடங்கொடுத் திருந்து மவற்றுட் டாக்கற்று நிற்றல்போற் குடும்பத்திற்கெல்லாந் தாம் பிரதானமாயிருந்து மவற்றொடுந் தாக்கற் றிருத்தலின் வெளியென்றும், விசிறி தன்னையெடுத்து விசிறிக் கொள்வார்க்குப் பயன் கொடுப்பதன்றி யவராற் றனக்குப்பயன் வேண்டா திருத்தல்போற் றம்மைக்கொண்டு பிறர் பயன்படுவதன்றி யவராற் றனக்குப் பயன்வேண்டா திருத்தல்போற் றம்மைக்கொண்டு பிறர் பயன்படுவதன்றி யவராற் றனக்குப் பயன்வேண்டா திருத்தலின் விசிறியென்றும், யாவர் குற்றமுடையரையுங் குணமுடையரையுஞ் சமனாகக்கண்டு நன்மொழி கூறலின், யாசியரென்றுங் கூறினார். போலென்கினு மென்பதனை யெல்லாவற்றொடுங் கூட்டுக. (௨௧)

(கலி-௩௰-ரு-௯௧.)

இங்ஙனங் குடும்பத்தோடு கூடியிருந்தும் பற்றற் றிருப்போரை ஞானிகளெனபது சுபாவம், சிவிகை கவிகை முதலியவற்றோடு மரசர்போல வாழ்கின்றோரையு மெங்ஙன ஞானியென்று சொல்வதெனின், பிராரத்தத்தால் வந்த பெருவாழ்வின்கட் பற்றின்றி யவ்வாழ்வநுபவிப்பைப் போதத்தாற்றுமனுபவியாது சிவத்துக்கு அற்பிதஞ் செய்கின்றோரும் ஞானிகளேயென் றித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

தண்டுகுடை யாளராய்ச் சாதுரங்கப் பேரரசாய்த்
தொண்டர்குழாம் போற்றச் சுகித்தாலு - முண்டுசுத்தர்
போகத்தா ரோகடர்போற் பொய்ப்போக மெய்ப்பெருக்காய்ச்
சோகப்போ வார்கடன்றீர்த் தல்.

(இ-ள்.) தண்டுகுடையாளராய்ச்சாதுரங்கப்பேரரசாய்த் தொண்டர்குழாம் போற்றச்சுகித்தாலுமுண்டுசுத்தர்போகத்தாரோ,, எ-து: நா

லவகைச்சேனையுஞ் சிவிகை கவிகை முதலியவுடையரா யடிமைக்கூட்டங்கள்சூழ்ந்துநின்று பரிசரிப்ப மகாபோகங்களை யநுபவித்தா ரெனினு மவற்றோடுந் தாக்கற்றுநின்று சுத்த நிலைபெற்றுரு முண்டு. அவ ரிப்பிரபஞ்சிகள்போலும் போகமயமா யழுந்துவரோ? வழுந்தா ரஃதெங்ஙனமெனின் ?

"சுடர்போற்பொய்ப்போகமெய்ப்பெருக்காய்ச் சாகப்போவார்க டன்றீர்த்தல்" எ-து. எண்ணெய் வார்க்குந்தோறுந் தன்னிடத்தில்வாங்கிக்கொண்டு தான்மிகவும் பிரகாசிக்குந் தீபம்போற் பொய்ப்போகம் வருந்தோறு மதனைத் தற்போதத்தாற்பற்றி யநுபவியா தருட்கண்ணாற்பார்த்துத் தாமற் றநுபவித்தலி னது மெய்ப்பொருட்காய்ப் பொய்ப்போகத்தான் மெய்ப்பொருண் மிகவும் பிரகாசமாய்த் தோன்றுமாகலினிங்ஙனமென் றறிதியாயின், மெய்ப்பொருளை யுணர்ந்தோர் பொய்ப்போகத்தோடுங் கூடியிருந் தநுபவிப்பதென்னையெனி, னக்கினியில் வீழ்ந் திறக்கப்போவார் தமக் குரியரா யுள்ளார் கொடுக்கும் போகமாகிய கடனைவாங்கி யதனுள் விருப்பற்றுண்டு தீர்த்துக் கோடல்போ லவரு மித்தேகத்தை யெப்போ தொழிவோமென்னுங் கருத்தரா யிதற்கமைத்த பிராரத்தக்கடனை விருப்பற் றநுபவித்துத் தீர்த்துக்கொள்வ ராகலி னவ ரதனோடுங் கூடியிருத்த லிம்முறை யென்றறிதி. எ-று.

ப-ம். போகம்வருந்தோறுந் தமக்கென்று தற்போதத்தாற்பற்றியநுபவியா தப்போதமற் றருள்வடிவாயிருந் தப்போகத்தைத் தாமநுபவிப்பதுபோற் சிவத்திற்காக்குவது மெய்ப்பத்தி. இப்பத்தியினு லச்சிவமாவது போதஞ் சிறிதெழினு மதனை விழுங்கிக்கொண்டு நின்று பிரகாசிக்குமாகலிற் "பொய்ப்போகமெய்ப்பெருக்கா" யென்றார். சாகப்போவார் போகத்தை விரும்பாதிருக்கவுஞ் சுற்றத்தாராயுள்ளா ரவளைவேண்டிக்கொடுவந்து புசிப்பித்தல்போன், ஞானிகள் போகத்தை விரும்பா திருக்கவும் பிராரத்தம் வலியக்கொடுவந்து புசிப்பித்தலி னிங்ஙன முவமைகூறினார். (௩௰)

(கவி-௩௧-அ-கை.)

ஞானிக ளநுபவிப்பதும் பிராரத்த மற்றைய ரநுபவிப்பதும் பிராரத்தமாயி னவர்க்கு மிவர்க்கும் பேதமென்னையெனின், ஞானிகள்தேகபோகங்களிற் பற்றிலராகலி னவர் பிராரத்த மத்தேகத்தோடு கழியுமென்று மஞ்ஞானிகள் பற்றுளராகலி னவர் பிராரத்த மிதர்கிதங்கள்

வருவித்துப் பிறப்புக் கேதுவாகுமென்று மித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

பெருநோவுக் கேயென்னப் பெற்றதுடற் போக
நரகேழு மூட்டுமிது நாஞ்செத் - துருவத்துத்
தாமல்லாற் போகிப்ப தல்லவது வன்பர்தங்
காவலாட் கைத்தளைபோற் காண்.

(இ-ள்.) பெருநோவுக்கேயென்னப் பெற்றதுடற்போக நரகேழுமூட்டுமிதுநாஞ்செத் துருவத்துத் தாமல்லாற்போகிப்பதல்ல,, எ-து. உடலாகிய பெருநோவுக் கென்னகருதிப் போகத்தை யநுபவிப்பது தானே பிறவியாகிய நரகமேழினுங் கொடுசென் றவற்றி லுண்பாகிய துன்பங்களைப் பொசிப்பிக்கும். இம்மெய்ந்நனமொனி, னிவ ரநுபவிக்குமிப்பிராரத்தந் தற்போதமாண் டித்தேகத்துத் தாமிருப்ப தல்லாமு லருள்வடிவாயிருந் தநுபவிப்பதல்லவாகலின் ?

"அதுவன்பர் தங்காவலாட் கைத்தளைபோற்காண்" எ-து. திருவடியைப் பிரியாது நின்ற வம்மெய்யன்பர் தம்பிராரத்தந்தற்போதமாண்டு தேகந் தாமல்லாது திருவருடாமாயிருந் தநுபவிப்பதாகலி னப்பிராரத்தந் தேகமிருக்குமளவுங் காவலாட்போலுங் கைத்தளைபோலுமிருந்து தேக நீங்கும்போ ததனோடுந் தானு நீங்குமாகலி னவர்க்கு மறுபிறவி யுள்ளவாகாவென் றறிதி. எ-று.

ப-ம். தேகந்தானும் போகந்தனதாயுங் கருதிக்கொண்டு தற்போதத்தா லப்போகத்தைப் பற்றி யநுபவித்தலி னிதாகிதங்களு மிவ்விதாகிதங்களா லிருவினைகளு மிவ்விருவினைகளான் மறுபிறவியு மிங்ஙனந் தொன்றுதொட்டு வருமாகலி "னரகெழுமூட்டு" மென்றார்.

போதமிறந் திருத்தலானும் பூரணவடிவாயிருத்தலானும் வினைசார்தற் கிடமின்மையா னவர்க்கு மறுபிறவி யின்றென்பதுகாண்க.

*உடம்பு மூப்புப்பிணிக்கிடமாகலி னதனைப்பெருநோவென்றார். "நாஞ்செத்துருவத்துத் தாமல்லாற் போகிப்பதல்ல" வென் றவர்க்குண்மையாய குணங்களை யிவர்க் கின்மையென் றெடுத்துக் கூறினமையா லவர்க்கவை வீருவிக்கப்பட்டது.

இதுவென்ப திவர் பிராரத்தமேனின்றது. அதுவென்பதவா பிரா ரத்தமேனின்றது பதம்-திருவடி. பதத்தினையுடைய வன்பனெனப்பொருள்கொள்க.

போகமாய்வந்து சூழ்ந்து கோடலானும,பரமுத்தனுகவொட்டாது தேகத்தி லவனைத் தடுத்து நிற்றலானும, பிராரத்தத்தைக் காவலாளென்றுங் கைத்தளையென்றுங் கூறினா. (௩௧)

(கலி-௩உ-அ-கை.)

ஒருவர்செய்தவினை மற்றொருவரைச் சாராமையா னவர்செய்த வினை யவரைச்சாராதிருப்ப தெங்ஙனமெனின், ஞானிகள் சிவானந்தா நுபவராகலி னவரை வினைகள்சாராவென்றும, அவர்க்கு இதாகிதங்களைச் செய்வோரிடத்தே பவை சாருமென்று மித்திருவெண்பாவிற்கூறுகின்றார்.

சுகிக்கிலலை துக்கஞ் சுடுகாடு சொர்க்க
மகத்துக்குஞ் சொர்க்கநர காய்ந்தார் - சுகிப்பதுவு
மத்துவிதா னந்தாக காகார மற்றது
பத்திசெய்வார்க் கேற்கும் பயன்

(இ-ள்.) சுகிக்கில்லைதுக்கஞ்சுடுகாடுசொர்க்க மகத்துக்குஞ்சொர்க்கநரகாய்ந்தார் சுகிப்பதுவு மத்துவிதானந்தாக்காகாரமற்றது,, எ-து. பரமசுகமே வடிவாயிருப்போர்க்குத் துக்கமென்பதில்லை துக்கமின்மையாற் சுகமுமின்றி அசுத்தமாகிய விடமென்னுங் கருத்துச் சிறிதெழினு மதுவேநரகமாய்த்தோற்றலி னசுத்தமாயுள்ள சுடுகாடேயவர்க்குச்சுவர்க்கம். அஃதன்றித் தா மாநந்தவடிவா யிருத்தலே சுவர்க்கமெனவுந் தேகந்தாமென்று சிறிதெழுங்கருத்தே நரகமெனவும் புறத்திற்குச் சொர்க்கநரகாய்ந்தாற்போ லகத்திற்குஞ் சொர்க்க நரகாய்ந்தார். அஃதன்றி யவரநுபவிப்பது மத்துவிதாநந்தமேயாம. இங்ஙன மிருந்த வத்துவிதாநந்தர்க் கவ்வாகாமியவினை புசிப்பாற்றுகின்ற திங்ஙனமவர்க்குப் புசிப்பாற்றுகின்று லவ்வினைதா னெவ்விடத்துச் செல்லுமெனின்?

"பத்திசெய்வார்க் கேற்குமபயன்" எ-து. அவர்மே லன்பா யிதஞ்செய்வோர்க்கும் வெறுப்பா பகிதஞ்செய்வோர்க்கு மவ்விருவினைப பயன்களுஞ் சாருமென்றறிதி. எ-று

ப-ம். ஆநந்தமேவடிவாயிருத்தலிற் றனுவில்லை யவ்வடிவிற்றற்போதமின்மையாற் காணமில்லை சுடுகாடே சுவர்க்கமாய்க்கொண்டலாற் புவனமில்லை யவ்வாநந்தத்தையே யநுபவித்தலாற் போகமில்லை யிங்ஙனந் தநுகரண புவனபோகங்களையெல்லாங் கடந்து நின்றோரை யவ்வினை சாரமாட்டாமையின் “நுகரப்பற்றாது” என்றார். தேகத்தையுடையவனைத் தேகியென்றாற்போலச் சுகவடிவாயிருந்தோனைச் சுகியென்றார். (௧௨)

(கலி-௱௱-அ-லை.)

இங்ஙனமிருந்த ஞானியடைந்த பேரின்பத்திற் குவமை யாதென்றபாற்றுக்களை நோக்கி ஞானியின் பெருமை யித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

அரிபிரமரிந்திராதிகளார் தானச்
சரிவிரத்த னின்பத்தைச் சாற்றிற் - பரமசிவன்
றானே சரிமீட்டுச் சாற்றுகிற்பன் றான்சரிவே
றானை வேதமறியா.

(இ-ள்.) அரிபிரமரிந்திரர்களாதிகளார் தானச் சரிவிரத்தனின்பத்தைச்சாற்றில்,, எ-து. அரிபிரமரிந்திரர் முதலிய தேவர்களி னின்பமெல்லா மொன்றாகக்கூட்டி யவ்விரத்த னின்பத்திற் குவமை சொல்லுமிடத்துச்சரி ?

“பரமசிவன்றானேசரிமீட்டுச் சாற்றுகிற்பன்றான்சரிவே றானைவேதமறியா” எ-து. அஃதன்றிப் பரமசிவனது பரிபூரணானந்தந் தானேசரி பின்னுஞ் சொல்லுமிடத்துத் தன்னின்பத்திற்குத் தன்னின்பமேசரி யிங்ஙனமெப்பொருள்கட்கும் வேறாய் நின்றவடைந்தா ரின்பத்தை வேதங்களு மிவ்வளவென் றளவிட்டறியமாட்டாது. எ-று.

ப-ம். பரமசிவனது பரிபூரணானந்தமெல்லாந் தாமாகிநின் றநுபவித்தலிற் பரமசிவன்றானே சரியென்றும், தன்னின்பம்போன் மற்றியாவர்க்கு மின்மையாற் றன்றான்சரியென்றும், அவ்வின்பமுந் தாமாகாததனையநுபவிப்போரா யிருத்தலின் “வேறானை” யென்றுங் கூறினார். இன்பத்திற் குவமைகூறினமையான் அவர்சரியென்றதை யவரதின்பஞ் சரியென்று கூறப்பட்ட தஃதாகுபெயர்.

(கவி-௩௪-அ-கை.)

சித்தாந்த ஞானம்போலே வேறு ஞான மின்றென்று மிந்தஞான ம்பெற்றோரை வழிபடுவோர் பெருமையே பெருமையென்று மித்திரு வெண்பாவிற் கூறுகின்றார்.

சாலோக மாதி தருஞ்சைவ சித்தாந்தி
பாலேகம் பார்க்கப் பணியுமவன் - மேலே
யுருகித் திருவுளத்துக் குற்றபணி செய்வார்
பெருமைக்கே துண்டோ பிற.

(இ-ள்.) சாலோகமாதிதருஞ்சைவசித்தாந்தி பாலேகம்பார்க்கப் பணியுமவன்மேலே,, எ-து. தன்னைவந்தடைந்தோரது பத்தி பணிவிடைக்கேற்ப வவர்க்குச் சாலோகசாமீப சாரூபமாகிய பதமுத்திகளையுங் கொடுக்குஞ் சித்தாந்தஞானிபா லேகமாயிருந்த மெய்ப்பொருளையறியும்பொருட்டுவந்து மனமொழி மெய்களான்வணங்கு மதிபக்குவன்மேல்?

"உருகித்திருவுளத்துக்குற்றபணிசெய்வார் பெருமைக்கேதுண்டோபிற" எ-து. பேரன்புவைத் துள்ளுருகி யவனது திருவுளத்திற்கேற்றபணிவிடைச்செய்வோரது பெருமைக்குமேலாய பெருமை பிறிதுயாதுண்டு. எ-று.

ப-ம். வந்தடைந்தோர் பக்குவாபக்குவங்களை யறிந்து சரிதாதிகளை வருவித்துச் சாலோகமாதி பதமுத்திகளைக்கொடுப்பதும், அதி தீவிரபக்குவனாய் வந்தோனுக்குத் தற்போதத்தைக் கெடுத்து நிரதிசய வின்பத்தைக் கொடுப்பதும், மற்றச்சமையங்களி லின்மையாற் "சாலோகமாதிதருஞ் சைவசித்தாந்தி பாலேகம்பார்க்கப் பணியுமவ" னென்றார்.

இங்ஙனமிருந்த சித்தாந்தியைப் பணியுமவனைப் பணிவோர்க்கு மம்முத்தியின்ப முண்டாமாகலி "னுற்றபணிசெய்வோர் பெருமைக்கே துண்டோபிற" வென்றார். (௩௪)

(கவி-௩௫-அ-கை.)

இதுவுமது.

காலமுடன் றேசந் திக்குக் கருமமுடற்
கோலஞ் சமயங் குறிப்பறிதல் - சீலந்

தலையோடு போனவுயிர் தான்போலத் தன்னோ
டிலையாஞ் சிவனே யிவன்.

(இ-ள்.) காலமுடன்றேசத்திக்குக்கருமமுடற் கோலஞ்சமையங் குறிப்பறிதல்சீலம்" எ-து. இன்னகாலத் தின்னவிரதஞ்செய்வதென்னு ங் காலமுங் காசிமுதலியனநன்றுமற்றையனதீதென்னுந்தேசமு மின் னதிக்குநன்று இன்னதிக்குத் தீதென்னுந் திக்குமின்னகருமஞ்செய்வ தின்னகருமந் தவிர்வதென்னுங் கருமமு முடலிற்சமைந்தவேடங்களு மவ்வேடங்கட்குரிய சமையங்களு மச்சமையங்கட்குரியகடவுளரையி ங்ஙன மிருப்பரெனக் குறிப்போடு தியானிப்பதாய குறிப்பறிதலு மின் னசாதிக் கின்ன தாசாரமென்று செய்யுஞ் சீலமுமாகிய விவையெல் லாம்?

"தலைபோகிப்போனவுயிர் தான்போலத்தன்னோ டிலையாஞ் சிவ னேயிவன்" எ-து. தலைபோனவிடத் ததனோடும்போன வுயிர்போலத் தற்போதமிறந்தவிடத் ததனோடு நீங்குமாகலின் மவுனாந்தமாயிருந்த சிவனே யிவனும். எ-று.

ப-ம். கைகான்முதலிய வுறுப்புக்கள் போனவிடத்து மிருந்தவுயி ர்தலையோடும் போனதுபோலப் போதஞ் சிறிதிறந்தவிடத்து மிருந்த கிரியைத் தொழில்களது முற்று மிறந்தவிடத் ததனோடு நீங்குமாகலி னங்ஙன முவமைகூறி னவற்றைச்செய்தவ னிறந்தமையா லிவனாற் செய்யப்படுமவையு மிலவென்பதூஉங் காண்க.

மவுனாந்தமாயுள்ள சிவனை யடைந்தவன் மவுனாந்தி யாகலிற் "சிவனேயிவ" னென்றார். (௯௫)

(கவி-௯௬-அ-கை.)

இங்ஙன மவர்க்கு விதிவிருத்தங்க ளில்லையென்று நீர்கூறியதென் னையெனின், ஞானிகட்கு விதிவிருத்தங்களிலவென் றித்திருவெண்பா விற் கூறுகின்றார்.

சாவே பெருநோன்பாய்ச் சந்தற்ற சத்தியர்க்குத்
தேவாரங் காலந் தியானமறம் - பாவம்
விதிவிருத்தம் பேசுகைக்கு வேதாக மங்க
ளதிசயிக்கு மேலுமைப்பா ரார்.

(இ-ள்.) சாவேபெருநோன்பாய்ச் சந்தற்றசத்தியர்க்குத் தேவாரங் காலந்தியானமறம் பாவம் விதிவிருத்தம்பேசுகைக்கு" எ-து. தம்போ

தமிறப்பதே பெருந்தவமாய்க்கொண் டதனைக்கெடுத்துச் சிவத்தோடு மிரண்டறக்கலந்த சத்திய ஞானிகட்குத் தேவாரமுதலிய தோத்திரங்களை யோதலுங் காலாகாலங்களறிந்து சிவாலயங்களிற் சென்று பணிதலு மோரோர் பாவனையைக்கருதித் தியானித்தலுஞ்சிவபூசையாதி புண்ணியங்களைச் செய்தலு மிவையன்றிப் பாவங்களைச் செய்தலுமாகிய விவ்விதி விருத்தங்களுளவென்று சொல்வதற்கு?

"வேதாகமங்க ளதிசயிக்கு மேனுனைப்பாரார்" எ-து. வேதங்களுமாகமங்களு மதிசயிக்குமெனி னவற்றிற்குமேன் மற்றியாவர் சொல்வார். எ-று.

ப-ம். போதஞ்சிறிதெழினு மதனைக்கெடுத்துச் சிவத்தோடுங் கலந்திருப்பதே யவர்க்குச் சகல நோன்புகளுமாகலிற் "சாவேபெருநோன்பாய்ச் சந்தற்றசத்திய" ரென்றார்,

அங்ஙனஞ் செய்வதே நோன்பாய்க் கொண்டோர்க் கதற்குமேன் மற்ற நோன்பொன்று மின்மையா னவர்க்கு விதிவிருத்தமிலவாயின. "வேதாகமங்களதிசயிக்கு" மென்றதனு னவற்றுன்விதிவிருத்த மறிவோர்க்கு வேறு சொல்வதற் கிடமின்மையான் "மேனுனைப்பாரா" ரென்றார். விதியாவது வேதாகமங்கள், சிவபூஜாதிகளைச் செய்கவென்று கூறுவது. விருத்தமாவது, மதுபானாதிகளை விடுகவென்று கூறுவது. (௧௬)

(கவி-௧எ-வு-கை.)

எமக்கு மிங்ஙனமிருக்குமென்று ஞானிகள தருமை யித்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

மோனிகளைப் பார்த்திமையா மோகமும் வெண்டிங்கண்
மேனி யழுகெழுதா மேற்பத்தி - யான
பதுமா தனன்கண்ணும் பானுவும்போற் றானு
யெதிராகுஞ் சொற்பணத்தி லும்.

(இ-ள்.) மோனிகளைப்பார்த்திமையா மோகமும்வெண்டிங்கண்மேனியழுகெழுதா,, எ-து. அந்தஞானிக ணம்மைப்போற் சுகாதீதமுத்தியைப் பெறும்பொருட்டுப் புறத்துநின்ற போதத்தை யுள்ளடக்கி யிதனைக்கெடுப்பதே விரதமாய்க்கொண்ட மவுனிகளை யிமையா நாட்டத் தேவரும் பார்த் திவர்மேல்வைத்த மோகமு முந்நூளனத்தால் வெண்

னந்தோற்றுவனவன்றி யவற்றா னவர்க்கியாதுசிறப்புமின் றவைவாளா தோற்று மழுங்குகளாம். எ-று.

ப-ம். ஆனந்த தோன்றும்போ துள்ளநெக்குருகத் தோன்றுமா கலி "னுருகுபரமசுக" மென்றுஞ் சடசித்துக்களாயுள்ள பொருள்களெல்லா மவர்க்குச் சுகசொரூபமாய்த் தோற்றுமாகலி னவாநோக்கைப் "பிரமசுகவுல்லாசநோக்" கென்றுங்கூறினார். "வினையேன் மனத்துத் தேனையும் பாலையுங்கன்னலையு மமுதத்தையுமொத், தூனையுமென்பினையு முருக்காநின்ற வொண்மையனே" யென்பதுமது.

பூநாளுந்தலைசுமப்பவென்றதுபோற் றோற்றுமென்பதைச் சாற்றுமென் றருமைதோன்றக்கூறினார். உல்லாசநோக்குமுதலியன வவர்க்குந்தாய்த்தோற்று திப்பியப்பத்தோற்றலி "னற்றேவெறுமனமுகா" மென்றார். (வெறும) னென்பது பாரப்பாசொல. (௩௮)

(கவி-௩௯-அ-கை.)

ஞானிகளினதருமை இத்திருவெண்பாவிற் கூறுகின்றார்.

வாடன் மணம்போல் வருந்தா வயிராக்யத்
தோடு மெலிந்த வுடம்புடனே - கூடா
திருவிடயா னந்தசுக நீங்காத நோக்குந்
திருமுகமு மென்னைவிடா து.

(இ-ள்.) வாடன்மணம்போல்வருந்தாவயிராக்யத் தோடுமெலிந்தவுடம்புடனேகூடா ரா, எ-து. வாடற்பூவின்மணஞ் சிறிது தோன்றுதல்போற் சிறிதுதோன்றும் பிராரத்தவாசனையோடுமே போதத்தான் வருந்திச்செய்யாத பாசவயிராக்கியத்தோடுந் தளராநின்ற திருமேனியுடனே கூடியிருக்குங் கூடாராகிய ஞானிகளது?

"திருவிடயானந்தசுகநீங்காதநோக்குந் திருமுகமுமென்னைவிடா து" எ-து. திருவிடயமாய்த்தோற்று மானந்தமாகிய சுக முட்போற்புறத்துநீங்காத வவ்வானந்தத் திருநோக்குந் திருமுகமு மென துள்ளத்தை யெப்போதும்விட்டு நீங்காது. எ-று.

ப-ம். "வாடன்மணம்போ" லென்றவுவமையாற் சிறிது பிராரத்தவாசனையோடுமென்பது வருவிக்கப்பட்டது.

